# சுமதிசதகம்.

இஃது

சகலருக்குமுபயோகமாகும்பொருட்டு

பதவுரை, பொழிப்புரை,

கருத்துரை சகிதமாய்

எழுமூர்

சயரபுரி முதலியார்

அவர்களால் இயற்றி,




சென்னப்பட்டணம்.

ப. எதிராசுலு நாயடால்

தமது

ஸ்ரீ கோபாலவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சோபகிருது ௵ தநுர் ௴.

1904.



விலை அணா - 6.



ஸ்ரீ

சுபமஸ்து.

# சுமதிசதகம்

பதவுரை, பொழிப்புரை, கருத்துரையுடன்.



(கந்தம்) ஸ்ரீராமுனி தயசேதனு
நாரூடிக சகலஜநுலு நௌரா யனகா
தாராளமைன நீதுலு
நோரூரக ஜவுலுபுட்ட நுடிவெத சுமதீ.

(பதவுரை) சுமதீ - நல்ல புத்தியையுடையவனே! ஸ்ரீராமுனி-ஸ்ரீராமனது, தயசேதனு-கிருபையால், ஆரூடிகன்-பிரசித்தமாய், சகலஜநுலுனு - ஜனங்கள் யாவரும், ஔரா - ஆச்சரியம், அனகான் - என்று சொல்ல, தாராளமு - விஸ்தாரம், ஐனநீதுலு-ஆன நீதிகளை, நோரூரகன்-வாய்ஊற, ஜவுலு-உருசி, புட்டன்-உண்டாகும் விதமாய், நுடிவெதன்-சொல்லுகிறேன், எ-று. சு - நல்ல, மதி - புத்தியுடையவன். சுமதி.

(பொழிப்புரை) நல்ல புத்தியுடையவனே! ஸ்ரீராமமூர்த்தியினுடைய கிருபையினால் பயிரங்கமாய் சகல ஜனங்களுக்கும் இஃது ஆச்சரியமென்று மதிக்கும்படி விஸ்தாரமான நீதிகளை வாயிற் சுவையூறும்படி சொல்லுகிறேன் என்பதாம்.

(கருத்துரை) ஸ்ரீராமனுடைய தயவினால் எல்லா ஜனங்களும் சரியெனும்படி வாயிற்றேனூற நீதிகளைச் சொல்லுகிறேன். (1)

(கந்தம்) அக்கரகு ராநிசுட்டமு
ம்ரொக்கினவரமீனிவேல்புமோஹரமு
னெக்கின பாறனிகுர்ரமு [னதா
க்ரக்குனவிடுவங்கவலயு கதரா? சுமதீ.

(பதவுரை) சுமதீ - சுபுத்தியுடையவனே! அக்கரகுன்-தனக்கவசியமான வேலைக்கு, ராநி-(உதவி) வாராத, சுட்டமுன்-உறவினரையும், ம்ரொக்கினன்-(தான்) பிரார்த்தித்த போது, வரமு-(விரும்பின) வரத்தை, ஈனி-கொடாத, வேல்ப்புன்-தெய்வத்தையும், மோஹரமுனன்-சண்டையில் வந்தெதிர்த்தபோது, தானு - வீரிபமுள்ளதான், எக்கினன் - ஏறின (போது),பாறனி-(சத்துருவை) எதிர்த்து ஓடமாட்டாத,குர்ரமுன்-குதிரையையும், க்ரக்குன-அந்தக்ஷணமே, விடுவங்கவலயுன்-விட்டுவிட வேண்டியது, கதரா-அல்லவா. எ-று.

(பொழிப்புரை) நல்லவிவேகமுடையவனே! தருணத்திற்குதவாவுறவினரையும், ஒன்றைவிரும்பி சிரத்தையுடன் பிரார்த்தனைசெய்தும் அருள்புரியா தெய்வத்தையும், பகைவன் வந்தெதிர்த்தபோது தான் ஏறியும் சத்துருவை யெதிர்த்து ஓடமாட்டாத குதிரையையும்; இவர்களைத் திரணமாக மதித்து உடனே விட்டுவிட வேண்டியதல்லவா? (ஆம் என்றபடி.)

(கருத்துரை) ஆபத்துக்குதவா வுறவினரையும், வரங்கொடாத தெய்வத்தையும், ஓடாத குதிரையையும் விட்டுவிடவேண்டும். (2)

(கந்தம்) அடிகின ஜீதம்பிய்யனி [ண்டென்
மிடிமேலபுதொரனுகொல்சி மிடுகுடக
வடிகல எத்துல கட்டுக [சுமதீ.
மடிதுல்னுகப்ருதுகவச்சு மஹீலோ

(பதவுரை) சுமதீ - நற்குணமுள்ளவனே! அடிகினன் - தான் கேட்டும், ஜீதம்-சேரவேண்டிய சம்பளத்தை, இப்யனி-

கொடாது, மிடிபேலபுதொமனு - கேழ்க்கும்போதே எரிந்து விழும் எஜமானனை, கொல்ச்சி-சேவித்து, மிடுகுடகண்டென்-கஷ்டத்துடன் பிழைத்தலைப் பார்க்கிலும், வடி-சீக்கிரத்தில், கலமத்துலன்-உண்டான எருதுகளை, கட்டுசு-ஏர்கட்டி, மஹிலோன்-பூமியில், மடி-நன்செய் நிலத்தை, துன்னுக-உழுது பயிரிட்டுக்கொண்டு, ப்ருதுகவச்சுன்-பிழைக்கலாம். எ-று.

(பொழிப்புரை) நற்குணமுள்ளவனே! ஒருவனைச் சேவித்து, தனக்குச் சேரவேண்டிய சம்பளத்தைக் கேட்டுத்தர மனவாட்டங்கொண்டு எரிந்துவிழும் பிரபுக்களைச் சேவித்து வாழ்வதிலும் அதிசீக்கிரத்தில் உண்டான இரண்டு எருதுகளை ஏர்கட்டி நிலத்தையுழுது பயிரிட்டு பூமியில் பிழைப்பது மிகவுஞ் சுகம்.

(கருத்துரை) கேட்டுஞ் சம்பளங்கோடாத எசமானனிடத்தில் ஊழியஞ்செய்வதினும், ஏருழுது சீவனஞ் செய்வது மேன்மை. (3)

(கம்) அடியாசகொலுவு கொலுவகு
குடிமணியமு சேயபோகு குஜனுலதோட
விடுவக கூரிமி சேயகு [ன்
மடவினிதோடரயகொண்டிநருககுசுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்புத்தியுடையவனே! அடியாசகொலுவு-விருதாவாசையுடன் சேவிக்கிற சேவகம், கொலுவகுமு-(பின்னிட்டு லாபம்வருமென்று நினைத்து) சேவிக்கவேண்டாம், குடிமணியமு - கோயில் மணியத்தை, சேயபோகு - செய்யவிரும்பாதே, குஜநுலதோடன்-அற்பமனிதர்களுடன், விடுவக-ஏதேனும் அவசியமான வேலையிருந்தாலந்த அளவுக்கல்லாமல், அதிகமுகா-அளவுக்குமிஞ்சி, கூரிமி-சிநேகம், சேயகுமு-நீ செய்யவேண்டாம், அடவினி-காட்டில், தோடு-துணை, அரயக-ஒருவர் துணையின்றி, ஒண்டி-தனியாய், அருககு-போக வேண்டாம். எ-று.

(பொ-ரை) நற்புத்தியுடையானே! பின்னிட்டுலாபம்வருமென்று நினைத்து விருதாவாசையுடன் ஒருவரிடத்தில் சேவிக்கிற சேவகம் அல்லது அதிக பணவாசையுள்ள எசமானனிடம் ஊழியம் செய்கிற

தம், கோயில் மணியஞ்செய்ய விரும்புதலும், தூர்ச்சனரிடத்தில் அள வுக்கு மிஞ்சி சினேகித்தலும், துணையோடல்லது தனியாய் காட்டில் நெடுந்தூரம் பிரயாணஞ் செய்வதும் கூடாவாம்.

(க-ரை) ஆசை நிறைவேறாத சேவகம், கோயிலிற் செய்யு மணியம், அற்பர் சிநேகம், துணையோடல்லது நெடுவழி யேகுதல் கூடாவாம். (4)

(கம்) அதரமு கதலியு கதலக
மதுரமுலகு பாஷலுடிகி மௌநவ்ருது
ணதிகார ரோகபூரித [டௌ
பதிராந்தகசவமு ஜூடட பாபமுசுமதீ.

(ப-ரை) சுமதீ-சற்குணமுடையவனே, அதரமு-உதடு, கதலியுகதலக-அசைந்துமசையாமல், மதுரமுலு-இன்பமான, அகுபாஷலு-வார்த்தைகளை, உடிகி-விட்டு, மௌனவ்ரதுடு-பேசாமலே இருப்பதையே நியமனமாகக்கொண்டு, அவுன்-இருப்பவன், அதிகார-அதிகாரமென்னப்பட்ட, ரோக-வியாதியால், பூரித-நிறைந்தவனுடைய, பதிர-செவிட்டுத்தனமுமான, சவமுன்-பிணத்தை, சூடன்-பார்ப்பது, பாபமு-பாவமுண்டாகும்.

(பொ-ரை) உதடானது அசைந்தசையாமலும், இதமானவார்த்தைகளைப் பேசாமல் மௌனஞ் சாதித்ததிலேயே ஒரு விரதமாகக் கொண்டு இறுமாப்படைந்து அதிகாரமென்னும் வியாதியினால் பிடிக்கப்பட்ட ஊமை செவிடு குருடு இவைகளின் தன்மையைப் பொருந்திய பிணத்தைப் பார்ப்பதே பாவமென்பதாம்.

(க-ரை). வாயெடுத்து நல் வார்த்தைகளைப் பேசாமல் மௌனஞ்சாதித்து அதிகாரஞ் செய்தலென்னும் வியாதியையுடைய அந்தச் செவிடு, ஊமை, குருட்டுப் பிணத்தைப் பார்ப்பதே பாவமாம். (5)

(க-ம்) அப்புகொனி சேயுவி பவமு
முப்புனு ப்ராயம்புடாலு, மூர்க்குனிதப
தப்பரயனி ந்ருபுராச்யமு [முன்
தெப்பரமை மீதகீடு தெச்சுர சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்குணமுடையவனே! அப்பு-கடன், கொனி-வாங்கி, சேயுவிபவமு-செய்யும் வேடிக்கையும், முப்புனன்-முதுமையில், ப்ராயம்புடாலு-சிறியமனேயாளும், மூர்க்குனிதபமுன்-மூடனுடைய தபசும், தப்பு-தப்பிதத்தை, அரயனி-தீரவிசாரியாத, ந்ருபராச்யமுன்-அரசனுடைய ஆளுகையும், மீதன் - பின்னிட்டு, தெப்பரமை-சகிக்கமாட்டாத, கீடுன்-கெடுதியை, தெச்சுர-விளேவிக்குமடா.

(பொ-ரை) நற்குணமுடையவனே! ஒருவரிடத்தில் கடன்வாங்கிச்செய்யும் டம்பங்களும், முதுமைப் பருவத்தில் இளமைப்பருவமுள்ளவளே மனேயாளாகக் கோடலும், பொறுமையில்லான் தவமும், ஒருவன் செய்த தப்பிதத்தைத் தீர விசாரியாத வரசனுடைய அரசாட்சியும், பின்னிட்டு சகிக்கக்கூடாத கெடுதியை விளேவிக்கும்.

(க-ரை) கடன் பட்டுச் செய்யும் வைபவங்களும், கிழத்தனத்தில் சிறிய பாரியாளைக்கோடலும், அடக்கமிலான் தவமும், பிழையாயா வரசனுடைய ராஜரீகமும் அபகீர்த்தியையே உண்டாக்கும். (௬)

(க-ம்) அப்பிச்சுவாடு வைத்துடு
நெப்புடு நெடதெகக பாறுநேருனுத்வி
ஜொப்படின யூரநுண்டுமு [ஜுடுன்
சொப்படகுன்னட்டியூருசொரகுமுசுமதீ

(ப-ரை) சுமதீ-நல்விவேகமுடையானே! அப்பு-கடன், இச்சுவாடு-கொடுக்கப்பட்டவனும், வைத்துடு - வைத்தியஞ்செய்பவனும், எப்புடுன்-எப்போதும், எடதெகக - இடைவிடாமல், பாறுநேருது-பாயும் நதியும், த்விஜுடுன்-இருபிறப்

பாளனும்,சொப்படினயூரன்-இருக்கும் ஊரில்,உண்டுமு-குடியிருா: சொப்பட குன்னட்டியூரு - இவைகளில்லாத ஊரில் சொரகுமு-நமையவேண்டாம்.

(பொ-ரை) நல்ல விவேகமுடையவனே ! கேட்குங்கால் கடன், கொடுக்கப்பட்டவனும், வைத்தியனும், எக்காலத்தும் இடைவிடாமல் பாயும் நதியும், பிராமணர்கள் ; இவர்கள் சரியாயிருக்கிற கிராமத்தில் குடியிருக்கலாம். மேற்சொன்னவர்கள் சரியாயில்லாமலிருக்கிற கிராமத்திற் பிரவேசிக்காதே.

(க-ரை) கடனீபவர் வைத்தியன் பாயும்நதி பிராமணனுமில்லாத ஊரிலே குடி இருக்கக்கூடாது. (7)

(க-ம்) அல்லுனிமன்சிநனம்புனு
கொல்லனிசாஹித்ய வித்ய கோமலிநிஜமு
பொல்லுன தன்சினபிய்யமு [ன்
தெல்லனிகாகுலுனு லேவுதெலியுரசுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்புத்தியுள்ளவனே ! அல்லுனிமன்சிதனம்புனு-மருமகனுடையநல்லதனமும், கொல்லனிசாஹித்ய வித்ய-இடையனுடைய அர்த்தக்கியானமுள்ள வாசிப்பும், கோமலிநிஜமுன் - பெண்களுடைய நிஜமும், பொல்லுநன்-விளைபிடியாத தானியத்தில், தன்சினபிய்யமு-குத்தியெடுத்த அரிசியும், தெல்லனிகாகுலுனு-வெள்ளைக்காக்கையும், லேவு-உண்டாகாவென்று, தெலியுர-நீ தெரிந்துகொள்.

(பொ-ரை) நற்புத்தியுள்ளவனே ! மருமகனுடைய நற்றன்மையும் இடையனுடைய பாஷாக்யானமும், பெண்களிடத்தி லுண்மையும் பால்பிடிக்காத செல்லைக் குத்தியெடுத்த அரிசியும், வெண்காக்கையும் உலகத்திற் கிடையாவென நீ அறிந்துகொள்ளக் கடவாய்.

(க-ரை) விழுமமுள்ள மருமகன், பாஷாக்யானமுள்ள இடையன்,உண்மையுள்ள பெண்டிர், பால்பற்றாத உமியிற் குத்திய அரிசி வெண்ணிறமுள்ள காகம் கிடையா. (8)

(௧௰) ஆகலியுடுகனி குடுபுனு
வேகடியகு லஞ்செபடுபுவிடுவனி ப்ரது
ப்ராகொன்ன நூதியுதகமு [குன்
மேகலபாடியுநு ரோதமேதினி சுமதீ.

(ப-ரை) சுமதீ-நல்லமதியுடையவனே! ஆகலி-பசி, உடுகனிகுடுபுனு-தீராத சாப்பாடும், வேகடி-கர்ப்பிணி, அகுலஞ்செபடுபு-ஆயினவேசியினுடைய, விடுவனி-விட்டுவிடாத சம்பாத்தியமும், ப்ரதுகுன் - விடக்கூடாத தொழிலும், ப்ராகொன்ன-பாச்சிபிடித்த, நூதியுதகமு-கிணற்றுத் தண்ணீரும், மேகலபாடியுனு-ஆட்டின்பாலும், மேதினின்-பூமியின்கண், ரோத-அசங்கியம்.

(பொ-ரை) நல்ல மதியுடையவனே! பசியாறவுண்ணுதசோறும், கர்ப்பமடைந்த வேசியின் வியாபாரமும், விட்டுவிடக்கூடாத தொழிலும், ஊரார்குடிக்க வுபயோகப்படாத பாச்சிபிடித்த கிணற்றுத் தண்ணீரும், புனிதத் தொழிலுக்குதவாத ஆட்டின்பாலும், பூமியின்மேல் அசங்கியமாகும்

(க-ரை) வயிறார வுண்ணாத சாப்பாடு, கர்ப்பமடைந்த வேசியின் சம்பாத்தியம், விடக்கூடாத தொழில். பாச்சிபிடித்த கிணற்றுத் தண்ணீர், ஆட்டின்பால் இவைகளை அசங்கியமாக மதிக்கப்படும். (9)

(௧௧) இச்சுனதெ வித்யா ரணமுன
ஜொச்சுநதேமகதனம்பு சுகவீஸ்வருலன்
மெச்சுநதெ நேர்ப்பு வாதுகு
வச்சுநதேகீடு சும்மு வசுதனுசுமதீ.

(ப-ரை) சுமதீ-சுமதியே! வசுதனு-பூமியில், இச்சுனதி-பிச்சையிடுதலானது, வித்ய - வாசித்தலின் பிரயோசனம், ரணமுன்-போர்க்களத்தில், சொச்சுனதே - பிரவேசிப்பதே, மகதனம்பு-வீரியமெனப்படும், சுகவீஸ்வருலன் - கவிஸ்வரர்கள், மெச்சுநதி-புகழப்படியானது, நேர்ப்பு-சாமர்த்தியம்,

வாதுகுன்-சண்டைக்கு, வச்சநதே-வருதலே, கிடு-கெடுதி, சுமீ-எனப்படும்.

(பொ-ரை) சுமதியே! பூமியில் பொருள்கிடைத்தகாலத்திலேயே தானதருமங்கள் செய்து யாசகருக்கு வயிறுற பிச்சையிடுதலே வாசித்ததின் பலனென்னப்படும். போர்க்களத்தில் சத்ருருகளுக்கு அஞ்சாது சண்டைக்குச் செல்லலே வீரியமென்னப்படும். நல்ல கவிசிரேஷ்டர்கள் மெச்சும்படியானதே சாமார்த்தியம். கலகஞ்செய்து சண்டைக்கு வருதலே கெடுதலேயாம்.

(க-ரை) ஒருவருக்குக் கொடுப்பதே வித்தை. சண்டைக்குச் செல்லுவதே வீரம். கவீச்சுரர்கள் கொண்டாடுவதே சாதுரியம். கலகத்திற்கு வருவதே அவமானம். (10)

(கம்) இம்முக ஜதுவனிநோருரு
நம்மாயனி பிலசியன்ன மடுகனிநோருன்
தம்முல பிலுவனிநோருரு
கும்மரிமனுத்ரவ்விநட்டி குண்டரசுமதீ.

(ப-ரை) சுமதீ-விசேஷ புத்தியுடையவனே! இம்முகன்-நன்றாய், சதுவனிநோருரு-வாசிக்காத வாயும், அம்மாயனி-அம்மாவென்று, பிலிசி - கூப்பிட்டு, அன்னமு - சோற்றை அடுகனிநோருன்-கேளாதவாயும், தம்முலன் - இளஞ்சகோதரர்களை, பிலுவனிநோருன்-கூப்பிடாதவாயும், கும்மரி - குயவன், மனு-மண்ணை, த்ரவ்விநட்டிகுண்டர - வெட்டியெடுக்குங்கா லேற்பட்ட குழிக்குச் சமானமாகும்.

(பொ-ரை) விசேஷ புத்தியுடையவனே! வாக்கு சுத்தியாய்ப் படியாத வாயும், அம்மா வென்று குறளெடுத்துக் கூப்பிட்டு வாங்கிச் சோற்றையுருந்தாத வாயும், கீழ்ப்பட்ட சகோதரர்களை யன்புடனழையாத வாயும். குயவன் பானை சட்டிகள் செய்ய மண்ணை வெட்டியெடுக்குங்காலேற்பட்ட குழியின் ஆழத்திற்குச் சமானமாகும். அதாவது மேற்சொல்லிய காரியங்கள் செய்யாதவனுடைய வாயானது குயவன் களிமண்ணை வெட்டியெடுத்த குழிக்குச் சமமாகும். வாயல்ல குழியென்பதாம்.

(த-ரை) நன்றாய்ப் படியாதவன், அம்மாவென்று கூப்பிட்டு அன்னங் கேளாதவன், தன் சகோதரர்களை வாயாரக் கூப்பிடாதவன், இவர்கள் வாய் துயவன் பாண்டத்திற்கு வெட்டின பள்ளத்திற்குச் சமானம். (11)

(க ம்) உடுமுண்டதே நூறேண்ட்லுனு
படியுண்டதே பேர்ம்மிபாமுபதி நூறேண்
மடுவுன கொக்கெரயுண்டதே [ட்லுன்
கடுநில புருஷார்த்தபருடு காவலெ சுமதீ.

(ப-ரை) சுமதீ-நன்மைபொருந்திய குணமுடையானே; இலன்-பூமியின்மீது, உடுமு-உடும்பு, நூறேண்டுலு-நூறு வருஷம், உண்டதே-பிழைத்திருக்கமாட்டாதா? பாமு-பாம்பானது, பதிநூறேண்டுலுன்-பத்துநூறுவருஷங்களுங்கூட, படியுண்டதே-பிழைத்திருக்கவில்லையா? மடுவுனன்-மடுவில், கொக்கெர-கொக்கானது, உண்டெடு-நெடுகாலம் பிழைத்திருக்கவில்லையா? கடுன்-அதிகமாய், புருஷார்த்தபருடு-தருமார்த்த காமமோக்ஷமென்னப்பட்ட புருஷார்த்தங்களில் பிரியமுள்ளவன், காவலென்-வேண்டும்.

(பொ-ரை) நன்மைபொருந்திய குணமுடையவனே! உடும்பு என்னும் பிராணியானது நூறாண்டு பிழைத்திருக்கவில்லையா! பாம்பானது ஆச்சரியப்படத்தக்க விதமாய் ஆயிரவருடஞ் ஜீவித்திருக்கவில்லையா! ஒரு பிரயோசனமுமில்லாமலே மடுவில கொக்கானது அநேக வருடங்களாக விருக்கவில்லையா! பூமியில் பெரும்பாலுந் தருமார்த்த காம மோக்ஷமென்னப்பட்ட புருஷார்த்தங்களில் பிரியமுள்ள புருஷன் வேண்டும். ஏனெனில் எவ்வளவுகாலம் புருஷார்த்தங்களைச் செய்யாமல் விட்டு ஜீவித்திருந்தாலும் வியர்த்த மென்பதாம்.

(த-ரை) உடும்பு, பாம்பு, கொக்கு முதலானவைகளைப்போல மனிதனும் நெடுங்காலம் விருதாவாக ஜீவிக்காமல் உலகத்தில் தர்மார்த்த காமமோக்ஷங்களெனும் புருஷார்த்தங்களைச் செய்ய பிரியமுள்ளவனாயிருக்கவேண்டும். (12)

(௧ம்) உத்தம குணமுலுநீசுனகெத்தெறகுநகலுகநேற்புநெய்யடலந்தா
நெத்திச்சி கரிகிபோசின
நித்தடி பங்காரமகுனெ யிலலோ சுமதீ.

(ப-ரை) சுமதீ-நிதான புத்தியுடையவனே! நீசுனகுன்-அற்பனுக்கு, உத்தமகுணமுலு-பாரிபுத்தி, எத்தெறகுனன்-எவ்விதத்தால், கலுகநேற்புன்-அடைவான், எய்யெடலன்-எக்காலத்திலும், தான்-வியாபாரியானதான், எத்திச்சி-தங்கத்துக்குச்சரியெடை உருக்குகிறவனிடம் கொடுத்து, இத்தடி-பித்தளையை, கரிகிபோவினன்-உருக்கிவார்த்தாலும், இலலோன்-பூமியில், பங்காரமகுனெ-தங்கமாகுமா(ஆகமாட்டாது) எ-று.

(பொ-ரை) நிதான புத்தியுடையவனே! நீசர்களுக்கு உத்தமகுணமிதுவென போதித்தாலும், எவ்விதத்தா லெக்காலத்திற்றுன் சற்கவல்லவர்கள்; வியாபாரியான ஒருவன் பித்தளையுடன் தங்கத்தைச் சரிக்குசரியெடை எடுத்து உருக்குகிறவனிடங் கொடுத்து எததனைதரம் நெல்லெண்ணெயை விட்டுஉருக்கியுருக்கிவார்த்தாலும் பூமியில் பித்தளைக்கு தங்கநிற முணடாகுமா? ஆகாது.

(க-ரை) தங்கத்தை பித்தளைக்குச் சரிக்குச் சரியெடை கூட்டியுருக்கிவார்த்தாலும் பித்தளை தங்கமாகாததுபோல, அற்பனுக்கு எத்தனைவிதமாய்ப் போதனை செய்தாலும் அவனது அற்பதுணமாறி பாரிபுத்தி யுண்டாகாது. (13)

(௧ம்) உதகமு த்ராவெடிஹயமுனு
மதமுன நுப்பொங்கு சுண்டுமத்தேபம்பு
மொதவுகட நுன்னவ்ருஷபமு [ன்
*.ஜதிவினபா நீசுஜேரஜநகுர சுமதீ.

(ப-ரை) சுமதீ-நிறைந்த புத்தியுடையானே! உதகமு-தண்ணீர், த்ராவெடிஹயமுன்-குடிக்குங் குதிரையைக்குறித்தும், மதமுனன்-வீரியத்தால், உப்பொங்குசுண்ட-விருத்தியடைகிற, மத்தேபம்புன்-மதமுள்ளயானையினைக்குறித்தும், பொ

* ஜதுவரியார்சுகடகு என்றும பாடபேத முண்டு.

தவுடன்-பசுவினிடம், உன்னவ்ருஷபமுன்-இருக்கும் இடபத்தினைக்குறித்தும், ஜதிவிநயாநீசுன்-படித்த நீசனுக்கு, சேரன்-அருகிலும், ஜனகுர-போகாதே. எ-று.

(பொ-ரை) நிறைந்த புத்தியுடையானே! தண்ணீராவலோடுங் குடிக்கிற குதிரையினருகிலும், வீரியம் மேலிட்டு மதமொழுகிக்கொண்டிருக்கும் யானையின் சமீபத்திலும், காமவிகாரம் மேலிட்டு பசுவினிடமிருக்கிற விடபத்தினிடத்திலும்,வாசித்தும் அற்பத்தனமுடைய நீசப்புலையனருகாமையிலும் நெருங்காதே! நெருங்கினுற் கேடுண்டாம் என்பதே.

(க-ரை) தண்ணீர்ப் பருகுங் குதிரையிடம், மதப்பட்ட யானை சமீபம், பசுவை யணையும் எருதினருகில், படித்த புலையனிடமும் நெருங்காதே. (14)

(க ரு) உபகாரிகி நுபகாரமு
விபரீதமு காதுசேய விவரிம்பங்கா
நபகாரிகி நுபகாரமு
நெபமென்னகசேயுவாடுநேர்ப்பரிசுமதீ.

(ப-ரை) சுமதீ-நீதியுள்ளவனே! உபகாரிகின்-(தனக்கு) உபகாரஞ் செய்தவனுக்கு, உபகாரமு-(பதில்) உபகாரம், சேயன்-செய்யுங்கால், விபரீதமு-விபரீதம், காது - ஆகமாட்டாது, விவரிம்பங்கான்-விசாரிக்குங்கால், அபகாரிகின்-(தனக்குக்) கெடுதி செய்தவனுக்கு, நெபமு-தோஷத்தை, என்னக-எண்ணாமல், உபகாரமு-உபகாரத்தையே, சேயுவாடு-செய்பவன், நேர்ப்பரி-சமர்த்தனுவான். எ-று.

(பொ-ரை) நீதியுள்ளவனே! தனக்குபகாரஞ் செய்தவனுக்குப் பதிலுபகாரஞ் செய்வது உலகத்தில் சாதாரணமல்லாமல் அஃது ஆச்சரியமன்று, தனக்கபகாரம் அதாவது கெடுதி செய்தவனே,தொடுவழக்குக்கிழுக்காது, அவன் கெடுதி செய்தனனே என்று கனவிலு நினையாமல் மறந்து, மறுபடியும் அவனுக்குபகாரஞ் செய்தலே ஆச்சரியமென்றெல்லார்க்கும் புலப்படச் செய்பவனே சாமர்த்திய புருஷனும்.

(க-ரை) உபகாரஞ்செய்தவனுக்கு நன்மைசெய்வது விசேஷ மன்று, அபகாரமியற்றியவனுக்குக் கூட நன்மை செய்வதே புருஷார்த்தம். (15)

(கம்) உபமிப்ப மொதலு திய்யன
கபடம் பெடநெடனு ஜெறகுகை வடிநே
நெபமுலு வெதுகுநுகடபட [போ
கபடபுதுர்ச்சாதி பொந்துகதரா சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்புத்தி யுடையவனே! கபடமு-வஞ்சகனுடை, துர்ச்சாதிபொந்து-துஷ்டனிட சிநேகத்தை, உபமிம்பன்-ஒத்திட்டுப்பார்க்குங்கால், செரகுகைவடிநே-கரும்பைப் போல, மொதலு-ஆரம்பத்தில், திய்யன-அதிக பிரியத்தை யுண்டாக்கி, எடநெடனு-வரவர, கபடம்பு-(கசந்து) கெடுதியைச்செய்யும், கடபடன்-முடிவில், நெபமுலு-தப்பிதங்களை, வெதகுநுகதரா-தேடுவான் அல்லவா? எ-று.

(பொ-ரை) நற்புத்தியுடையவனே! மோச குணமுடைய மூடர்களின் சிநேகத்தினுடைய பலனை யுவமிக்குங்கால் கரும்பையொக்கும். எப்படியெனில்:—கரும்பானது முதலில் தித்திப்பாகி யதிகபிரியத்தை யுண்டாக்கி வரவரக் கசந்து கெடுதியைச் செய்யும். அதுபோல் தப்பிதங்களைத் தேடும் அற்பர்களிடத்திற் சிநேகம் செய்தால் முதலி லின்பமாயிருப்பினும் அந்தியத்தி லாபத்து நேரிடுமென்பது திண்ணம்.

(க-ரை) வஞ்சனையுள்ள துஷ்டர்களினிட சிநேகம் கரும்பைப் போல ஆரம்பத்தி லின்பந்தரினும், முடிவிற் கெடுதி விளைவிக்குமென்பதாம். (16)

(கம்) என்னடு·குடுவக கட்டக
தன்னேமறி கூர்ச்சுதநமுதரலோ நெபுடு
மன்னிலகு ஜ ஏதருலகு [ன்
கன்னெலகுநு போவுசுண்டுகெதரா சுமதீ.

(ப-ரை) சுமதீ-சற்புத்தியுள்ளவனே ! என்னடுவ்-எக்காலத்திலும், குடுவக-உண்ணாமல், கட்டக-உடுக்காமல், தன்னே-தானே, மறி-மேன்மேலும், கூர்ச்சுதமு-சேர்த்துவைக்கு மந்த திரவியம், நரலோன்-பூலோகத்தில், மன்னீலகுன்-அரசனுக்கும், ஜூதகுலகுன்-சூதாடுபவனுக்கும், கனெலகுன்-வேசிக்கும், போவுகுன்டுகதரா-போகுமல்லவா? எ-று.

(பொ-ரை) சற்புத்தியுள்ளவனே ! சதாகாலமும் தானுண்பவைகளை வயிறார வுண்ணாமலும், கட்டவேண்டிய நல்ல வஸ்திரங்களைக் கட்டாமலும்,மேலுமேலும் பாடுபட்டுத்தேடி சற்பாத்திரத்திற் செலவழிக்காமலிருக்கிற திரவியத்தை யிந்த பூமியி லரசருக்கும், சூதாடுபவர்களுக்கும், வேசியருக்கும் விருதாவாய்ப் போகுமல்லவா ?

(க-ரை) உண்ணுவதற்கும், உடுப்பதற்கு முபயோகப்படுத்தாமல் சேர்த்துவைக்குந் திரவியம் பின்பு, அரசர்கள் சூதயாடுபவர்கள் வேசியர் முதலானவர்களுக்கே சேரும். (17)

(கஅ) எப்படி கெய்யதி ப்ரஸ்த்துத
மப்படி காமாடலாடி யந்யுலமநமுல்
நொப்பிம்பக தானொவ்வக
தப்பின்சுக திருகுவாடுதந்யுடு சுமதீ.

(ப-ரை) சுமதீ - நன்னெஞ்சுடையவனே ! எப்படிகின்-எந்தச் சமயத்தில், எய்யதி-எந்தக்காரியம், ப்ரஸ்த்துதமு-அவசியம் நடக்கவேண்டுமோ, அப்படிகின்-அந்த சமயத்துக்கு, ஆமாட லு-அதற்குத்தகுந்த வார்த்தைகளை, ஆடி - சொல்லி, அந்யுலமனமுல்-இதராளுடைய மனதை, நொப்பிம்பக-நோகப்பண்ணுமல், தானொவ்வக-தனக்கொரு கெடுதியும்வராமல், தப்பின்சுக-தப்பித்துக்கொள்ள, திருகுவாடு-நடந்துகொள்பவன், தந்யுடு-கிருதார்த்தனுவான். எ-று.

(பொ-ரை) எந்தச்சமயத்தி லெக்காரியம் அவசியம் நடக்கவேண்டுமோ அக்காலத்தி லச்சமயத்திற் கதற்குத்தகுந்த வார்த்தைகளாடி யந்நியர் மனதை புண்ணுக்காமலுந் தன் மனதையு நோகச் செய்துக் கொள்ளாமலும் தப்பித்துக்கொண்டு திரிபவனே மேலான வல்லமையுடைய புருஷன் என்பதாம்.

(க-ரை) எப்பொழு தேச்சோற்குத் தக்கனவோ அப்பொழு தச்சொற்களை யாடி, அவ்வவர் மன நோகச்செய்யாமற் றானுஞ் சந்தோஷத்தோடு தப்பித்துத் திரிதல் வல்லமை. (18)

(க ம்) எப்புடு தப்புலு வெதகெடு
நப்புருஷுநி கொல்வகூட ததியெட்லன்
சப்பம்பு படிகெ நீடனு [னன்
கப்ப வசின்சினவிதம்பு கதரா சுமதீ.

(ப-ரை) சுமதீ - நல்ல ஞாபகமுடையவனே! எப்புடு - எப்போதும், தப்புலு-தப்பிதங்களையே, வெதகெடு-தேடும், அப்புருஷுனி-அந்த எசமானனை, கொல்வன் - சேவிப்பது, கூடது-தகாது, அதிஎட்லன்னன்-அவ்வேலையானது எப்படியென்றால், சப்பம்புபடிகெநீடனு - சர்ப்பத்தின் படத்தின் நீழலில், கப்ப-தவளை, வசின்சினவிதம்பு - இருக்குமாபோலாகும், கதரா-அல்லவா. ஏ-று.

(பொ-ரை) எப்போதும் அற்ப குற்றங்களையே தேடிக்கொண்டு திரியும் எஜமானனிடத்தி லூழியஞ் செய்வது கூடாது. அப்படி பொறுமையுடன் செய்யும் வேலையான தெப்படி யிருக்குமென்றால் படமெடுத்தாடும் பாம்பின் படநிழலிற் றவளை வாழ்தலுக்கு நேராகும்.

(க-ரை) அற்ப குற்றங்களை யெப்பொழுது மாராயும் எசமான னிடத்திற் சேவிப்பவன் பாம்பின் பட நிழலிலிருக்கிற தவளையை யொக்கும். (19)

(க ம்) எப்புடு சம்பத கலுகுனு
நப்புடுபந்துவுலு வத்துரதி யெட்லன்ன
தெப்பலுக ஜெருவு நிண்டின [ன்
கப்பலுபதிவேலு சேருகதரா சுமதீ.

(ப-ரை) சுபுத்தீ-நற்குணமுடையவனே! எப்புடு - எந்த சமயத்தில், சம்பத-சம்பத்து, கலுகுனு-உண்டாகுமோ, அப்புடு-அச்சமயத்திலேயே, பந்துவுலு-பந்துக்கள், வத்துரு-வரு

வார்கள், அதியெட்லன்னன்-அஃதெப்படியென்றால், தெப் பலுகன்-பூர்ணமாய், செருவு-ஏரியானது, நிண்டினை-நிறைந் திருந்தால், கப்பலு-தவளைகள், பதிவேலு-பதினாயிரம் (அநே கம்) சேருன்-சேரும், கதரா-(அதுபோல) அல்லவா. என-று.

(பொ-ரை) நற்குணமுடையவனே! பூரணமாய் ஏரி நிறைந்தி ருந்தால் விசேஷமாய் தவளை முதலான பிராணிகள் வலியவந்து சேரு மாப்போல எச்சமயத்திலொருவனுக்கு சம்பத்துண்டாகுமோ அச்சம யத்திலேயே இல்லாத வுறவின் முறையை கற்பிதஞ் செய்துகொண்டு பந்துக்கள் தாங்களே வலிய வந்து சேருவார்கள்.

(க-ரை) ஏரி நிறைந்திருக்கும்போது தவளை முதலான பிராணி கள் சேருகிறதுபோல திரவியமுண்டானபோது எண்ணிறந்த பந் துக்கள் நெருங்கின உறவுகொண்டு நெருங்குவார்கள். (20)

(கம்) ஏறகுமீ கசுகாயலு
தூறகுமீ பந்துஜநுல தோஷமுசும்மீ
பாறகுமீ ரணமந்துன
மீறகுமீ குருவுலாக்ஞமேதினி சுமதீ.

(ப-ரை) சுமதீ-நன்மையான புத்தியுடையவனே! மேதி னின்-பூமியில், கசுகாயலு-பூப்பிஞ்சுகளை, ஏறகுமீ-(நீ) பறிக்கா தே, பந்துஜநுலன்-உறவின்முறையாரை, தூறகுமீ-(நீ) தூஷிக் காதே, ரணமந்துனன்-போரில், பாறகுமீ-(நீபயந்து) ஓடாதே, குருவுலாக்ஞ - குருவு முதலானவர்களுடைய கட்டளையை, மீறகுமீ-(நீ) மீறிநடவாதே (அதனால்) தோஷமு-பாவம், சும்மீ- உண்டாகும்.

(பொ-ரை) நன்மையான புத்தியுடையவனே! பூலோகத்தில் முற்றாத பூப்பிஞ்சுகளை நீ பறிக்காதே, உறவின்முறையாரை மனநோ கும்படி நீ தூஷிக்காதே, போர்க்களத்தினின்றுஞ் சத்ராதிகளுக்குப் பயந்து நீ முதுகுகாட்டி யோடாதே, பெற்றோர் ஆசான் முதலிய குர வர்களுடைய வார்த்தைகளை மீறிநடவாதே அப்படிச் செய்தாலவைகள் பாவமுண்டாக்கும்.

(க-ரை) பூப்பிஞ்சுகளைப் பறித்தலும், பந்துக்களை தூஷித்த லும், சண்டையில் பின்னுக்கு வாங்கலும், தூரவர்களேற்பாட்டை மீறலும் பாவம். (21)

(கம்) ஒகயூரிகி நொககரணமு
நொகதீர்ப்பரி யைநகாக யொகிதருனைன
ககவிகலு காகயுண்டெநெ [ன்
வலகலம்புநு கொட்டிவடகசகஜமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-நீதிமானே! ஒகவூரிகின்-ஒரு கிராமத் துக்கு, ஒககரணமுன்-ஒரே கணக்கனும், ஒகதீர்ப்பரி-ஒரே அதிகாரியும், அயினகாக-இருந்தாலொழிய, ஒகன்-ஒருவன் பிறொருவனாக, தருனைனன்-அதிகப்பட்டால், வலகலம்புநு-அவ்வளவும், ககவிகலுகாக-சின்னாபின்னங்களாகும், கொட் டிவடக-கெடாமல், வகஜமு-சரியாய், உண்டுநே-இருக்குமா? (இருக்கமாட்டாது.)

(பொ-ரை) நீதிமானே! ஒரு கிராமத்துக் கொரே கணக்கனும், ஒரே நியாயாதிபதியுமிருந்தால் கிராமம் சரியாயிருக்கும். அப்படிக்கல் லாமல் ஒருவருக்குப்பிறொருவராக அதிகாரிகள் அதிகப்பட்டா லங்கு அவ்வளவுஞ் சின்னாபின்னப்படாமல் சுவாபமா யிருக்கமாட்டாது.

(க-ரை) ஒரு கிராமத்தி லொரே கணக்கனும், ஒரே நியாயாதி பதியுமல்லாமல் அநேகரிருப்பாராயி னவ்விடத்தி லெல்லாக் காரிய முங்கெடும். (22)

(கம்) ஒல்லனிஸதி நொல்லனிபதி [டே
நொல்லனிசெலிகானிவிடுவ நொல்லனிவா
கொல்லண்டு காகதரலோ [சுமதீ.
கொல்லண்டுநு கொல்லடவுனெ குணமுந

(ப-ரை) சுமதீ-நிர்மலமதியான மனதுடையவனே! ஒல்லனி சதின்-(தன்னை) விரும்பாத மனைவியும், ஒல்லனிபதின்-(தன்னை) விரும்பாத எஜமானனையும், ஒல்லனிசெலிகாலின்-

(தன்னை) விரும்பாத நேசனையும், விடுவன்-விடுவதற்கு, ஒல்லலரிவாடே-விரும்பாதவனே, கொல்லண்டுகாக-மடையனல்லாமல், தரலோன்-பூமியின்கண், கொல்லண்டினு - இடையனுர், குணமூனன்-சுபாவத்தால், கொல்லடவுனே-மடையனவனு? ஆகமாட்டான்.

(பொ-ள்) நிம்மதியான மனதுடையவனே! தன்னை விரும்பாத மனைவியையும், தன்னை விரும்பாத எசமானனையும், தன்னை விரும்பாத சிநேகிதனையும், எவனொருவன் விட்டொழிய மனமில்லாதவனோ அவனே பூலோகத்தில் குணத்தால் மடத்தன்மையுள்ள இடையனல்லாமல், குலத்தி லிடையனானவன் கூட குணத்தில் இடையனென்று சொல்லப்பட்ட மடையனாகமாட்டான்.

(க-ரை) தன்னை விரும்பாத மனையாள், எசமானன், சிநேகிதன் இவர்களை விட்டொழியக்கூடாத கபாலமுடையவனே மடையனல்லாமல், குலத்திலிடையனான மடையனும் குணத்திலப்படியாகான். (23)

(க ம்) ஓடல பண்டிஓடு வச்சுறு
நொடலுறு பண்டிலமீந நொப்பகவச்சு
ஓடலுபண்டிலுறு வலமேந [ன்
வாடம்பநி கலிமி லேமிவசுநது சுமநீ.

(ப-ரை) பாரதீ-நல்லறிவு உடையவனே! ஓடலன்-ஓடத்தின்மேல், பண்டிலுன்-வண்டிகள்கூட, வச்சுனு-வரும், ஆபண்டலமீதன்-அந்த வண்டிகளின்மேலே, ஓடலன் - ஓடங்களும், ஒப்புகன்-தகுந்தவிதமாய், வச்சுன்-வந்துக்கொண்டிருக்கும், ஓடலுபண்டலவலெவே-அந்த ஓடமும் வண்டிகளுமெப்படியோ அப்படியே, வாரதனு-பூலோகத்தில், கலிமி - செல்வமும், லேமி-வறுமையும். வாடம்பதின்-வழங்கப்படும்.

(பொ-ள்) நல்லறிவு உடையவனே! ஓடங்களின்மேல வண்டிகளும் அவ்வண்டிகளின்மேற் கூட ஓடங்களுமேறிவரும், ஓடங்களும் வண்டிகளும் ஒன்றின்மேலொன்றாக வெப்படி மாறிமாறி வந்துக்

கொண்டிருக்குமோ பூலோகத்திலப்படியே செல்வமும் வறுமையும் வினைக்குத் தக்கபடி யநுபவிக்கவேண்டி வருமென்பதாய் விவகரிக் கப்படும்.

(க-ரை) ஓடஞ் சகட்டின்மேலும் பின்னாச்சகடம் ஓடத்தின் மேலும் மாறி மாறி வருகிறதுபோலவே உலகத்தில் செல்வத்தின் பிறகு தரித்திரமும், தரித்திரத்தின் முடிவில் செல்வமும் வரும். (24)

(கம்) கடுபல வந்துண்டைனனு
புடமினிப்ராயம்புடாலி புட்டினயின்டன்
தடவுண்ட நிச்செநேனியு
படயக நங்கடிகிதாநெ பம்புட சுமதீ.

(ப-ரை) சுமதீ-உத்தம குணமுடையவனே! புடமினின்-பூமியில், கடுன்-மிகுந்த, பலவந்துடு - வல்லமையுள்ளவனாய், ஊனனு - இருந்தபோதிலும், ப்ராயம்புடாலின் - வயதுவந்த மனைவியை, புட்டின இன்டன் -(அவள்) தாய்வீட்டில், தடவு - நீடித்தகாலம், உண்டநிச்சநேநியுன் - இருக்கும்படிச் செய்தால், படயகன்-திரவியந்தேட, அங்கடிகின்-கடைக்கு, தானே-தானுகவே, பம்புட-அனுப்பினதற்கு வொக்கும்.

(பொ-ரை) உத்தம குணமுடையவனே! பூலோகத்திலொருவன் எனெவ்வளவு பலசாலியானாலும் வயது வந்த தன்னுடைய மனையாளைப் பிறந்தவத்தாய்வீட்டிலேயே நெடுங்காலம் விட்டுவைத்துப் பின்பு அழையாமற் கொழுக்கவைத்தல் தானே அவளைத்திரவியந்தேடக்கடைக் கனுப்பினதற்குச் சமானமாகும்.

(க-ரை) புருஷனெவ்வளவு பலசாலியானாலும், வயதுவந்த தன் மனையாளைத் தாய்மனைக் கனுப்பி நெடுங்கால மங்கு இருக்கச் செய்தால் அவள் குணவதியா யிருக்கமாட்டாள். (25)

(கம்) கனகபு சிம்ஹாஸனமுன
சுனகமு கூர்ச்சுண்டபெட்டி சுபலக்னமுன
தொனரக பட்டமு கட்டின [னம்
வெனுகடி குண மேலமானுவிநுரா சுமதீ.

(ப-ரை) சுமதீ - நல்ல ஞாபகமுடையவனே! விநுரா - கேள், கனகபுசிம்ஹாசனமுனன்-சொர்ன சிங்காதனத்தின் மேல், சுனகமுன்-நாயை, கூர்ச்சுண்டபெட்டி - உட்காரும்படிச்செய்து, சுபலக்கினமுனந்துன்-நல்லசுபமுகூர்த்தத்தில், ஒநரங்கன்-ஒப்புக்கொண்ட மாதிரியாய், பட்டமுகட்டினன்-பட்டாபிஷேகஞ் செய்துவைத்தாலும், வெநுகடிகுணமு - அதற்கு முன்னுள்ள நீசகுணத்தை, ஏல - ஏன் அந்தநாய், மாநு-விடும். (விடாதென்றபடி) எ-று.

(பொ-ரை) நல்ல ஞாபகமுடையவனே! கேள், பொன்னுலாகிய சிங்காதனத்தின்மீது நாயினை யேற்றி ராஜரீகத்திற்குறிய இராஜனுக்கிது சமானமென்று வொப்பி பட்டாபிஷேகஞ் செய்து பட்டங்கட்டினுலும், அதற்கு முன்னுள்ள சுபாவமான அற்பகுண மாறாததுபோல நீசர்களுக்கு மேலான அதிகாரங் கொடுத்து கௌரவப்படுத்தினுலும் தங்களுக்குச் சுபாவமாக முன்னுள்ள அற்பகுணத்தையே விடாமற் காட்டுவார்கள்.

(க-ரை) நாயை நன்னுளினிற் பொன்னுலாகிய சிங்காதனத்தின் மீதினிலேற்றிப் பட்டங்கட்டிடினும் நீசகுணமதற்கு மாறாதது போல அற்பர்களுக் கெவ்வளவு வாழ்வு வந்தபோதிலுந் தங்கள் நீசகுண மாறு. (26)

(கஎ) கப்பகு நொரகாலயினனு
சப்பமுனகு ரோகமைன வஸதிதுலவைந
முப்புன தரித்ருடைனநு [ன்
தப்பதுமறி துக்கமகுட தத்யமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-விசேஷ விவேகமுள்ளவனே! கப்பகுன்-தவளைக்கு, ஒரகாலு-வளைந்த கால்கள், ஐனனு - உடைத்தாயிருந்தாலும், சப்பமுனனே-பாம்புக்கு, ரோகமைனன்-வியாதியுள்ளதாயினும், சதி-மனைவியானவள், துலுவ-துன்மார்க்கமுள்ளவள், ஐனன்-ஆயினும், முப்புனன்-முதுமையில், தரி

த்ருடைனலு - தரித்திரனானாலும், மரி-மிகவும், துக்கமகுட-துன்பமுண்டாதல், தப்பது - நீங்கமாட்டாது, தத்யமு - சத்துண்மை. எ-று.

(பொ-ரை) விசேஷ விவேகமுள்ளவனே ! தவலையானது வளைந்த காலுடைத்தாயிருந்தாலும், பாம்பு வியாதியுள்ளதாயினும், மனைவியானவள் துன்மார்க்கமுள்ளவளாயினும், முதுமையில் வறுமை வந்தாலும் மிகவும் துன்பம் விளைவிப்பதினின்று நீங்கமாட்டாது. இஃது உண்மை.

(க-ரை) வளைந்த காலுள்ள தவலை, வியாதியுள்ள பாம்பு, அடங்கா வாயுள்ள மனையாள், முதுமையில் வறுமை, இவை தப்பாம லதிக துன்பந்தரும். (27)

(கஎ) கமலமுலு நீடபாஸின
கமலாப்துனி ரஸ்மிஸோகி கமலினபங்கி
தமதம நெலவுலுதப்பின [ன்
தமமித்ருலு சத்ருலௌட தத்யமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-சுஞானமுடையவனே ! நீடன்-ஜலத்திலிருந்து, பாஸினன்-நீங்கின, கமலமுலு-தாமரை புஷ்பங்களானவை, கமலாப்துனி-சூரியனுடைய, ரஸ்மி-கிரணம், ஸோகி-தாக்கி, கமலினபங்கின் - வாடிப்போவனபோல, தமதம நெலவுலு-தங்கள் தங்கள் நிலைமைகளினின்று, தப்பினன்-மாறிப்போனால், தமமித்ருலு-தன் சிநேகிதர்களுங் கூட, சத்ருலு-பகையாளிகள், ஔட-ஆதல், தத்யமு-நிஜம். எ-று.

(பொ-ரை) கலைஞானமுடையவனே ! ஜலத்திலிருந்த தாமரை புஷ்பங்களை கரையிற் போட்டக்கா லிதுகாறு மவைகளுக்கு நண்பனாயிருந்து இதமுடன் மலரச்செய்துகொண்டுவந்த சூரியனே அவைகளுக்குச் சத்துருவாகி வாடச்செய்வதுபோல, எப்படிப்பட்டவர்களானாலும் நிலைமைவிட்டு நீங்குவாராயின் தங்களுக்கு அத்தியந்த ஆப்தர்களாயிருந்த அவர்களாலேயே கெடுதி நேரிடுவது சரதம்.

(க-ரை) தாமரையானது நீரைவிடில் அதற்கிதமான சூரிய கிரணத்தினாலேயே கருகுவதுபோல, யாவராயினுந் தங்கடங்கள் நிலை தவறிடில் ஆப்தர்களுங்கூட விரோதிகளாவார்கள். (28)

(கம்) கரணமு கரணமு நம்மின
மரணாந்தக மௌநுகானி மநலேடிசுமதீ
கரணமு தனசரி கரணமு
மறிநம்மக மர்ம்மமீகமனவலெ சுமதீ.

(ப-ரை) சுமதீ - சுபுத்தியுடையவனே! கரணமு-கிராமக் கணக்கனானவன், கரணமுன் - மற்றொரு கணக்கனை, நம்மினன்-(கெடுதிசெய்யானென) நம்பினால், மரணாந்தகமு-சாகும்படியான முடிவுக்கு, ஔனுகானி-வருமே அல்லாமல், மனலேடு - (நம்பின கணக்கன்) பிழைக்கமாட்டான், அமீ-அது போல, கரணமு-கிராமக்கணக்கெழுதும் கணக்கனானவன், தனசரிகரணமுன்-தனக்குச் சமானமான கணக்கனை, மறிநம்மக-அதிகமாய் நம்பாமலும், மர்ம்மமீக-தன் மர்ம்மத்தைத் தெரிவிக்காமலும், மனவலென்-பிழைக்கவேண்டும்.

(பொ-ரை) சுபுத்தியுடையவனே! ஒரு கிராமக் கணக்கனானவன் மற்றொரு கிராமக் கணக்கன் நயக்குக் கெடுதி செய்யமாட்டானென்றெண்ணி நம்பினால் அப்படி நம்பின கணக்கன் சாகும்படியான முடிவுக்கு வருவனேயன்றி பிழைக்கமாட்டான். ஆகையால் ஒரு கணக்கன் தனக்குச் சமானமான கிராமக் கணக்கனை யதிகமாக நம்பாமலும், தனது மர்ம்மத்தை யவனுக்கு வெளிவிடாமலும் பிழைக்க வேண்டுமென்பதாம்.

(க-ரை) ஒரு கணக்கன் மற்றொரு கணக்கனை நம்பி யாபத்தடையாமற் றப்பித்துக்கொள்ளான்; ஆகையால் தனக்குச் சமானமான கணக்கனிடத்தில் தனது மர்ம்மத்தை விடாமலிருக்க வேண்டும். (29)

(கம்) கரணமுல னனுசரிம்பக
விரசம்புன தின்னதிண்டி விகடின்சுசுமதீ
இருசுன கந்தென பெட்டக
பரமேஷ்வரு பண்டியைன பாறது சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்குணமுடையானே ! கரணமுலன் - கணக்கர்களை, அநுசரிம்பக-அநுசரிக்காமல்- விரஸம்புனன்- விரோதமாயிருந்து, தின்னதிண்டி-அநுபவிக்குஞ் சொத்தானது, விகடின் சுசுமீ-நிலைநிற்கமாட்டாது, இருசுனன்-(வண்டியின்) இரிசிலே, கந்தெனை-எண்ணெயோடுகலந்த கரியானது, பெட்டக-தடவாமல், பரமேஸ்வர பண்டியைனன்-பரமசிவத்தினுடைய வண்டியாயினும், பாறது-ஓடமாட்டாது. எ-று.

(பொ-ரை) நற்குணமுடையானே ! வண்டியினிரிசிலே எண்ணெயோடு கலந்த கரி அல்லது கொழுப்பாவது தடவாமல் மகாதேவனுடைய வண்டியாயினுஞ் சரியாய் ஓடமாட்டாததுபோல், தாங்கள் குடியிருக்குங் கிராமக் கணக்கர்களை யநுசரிக்காமல் விரோதஞ் செய்துகொண்டு அக்கிராமத்திலேயே அநுபவிக்குஞ் சொத்துக்களானவை தங்களுடையனவாயினும் நிலை நிற்கமாட்டா.

(க-ரை) மகாதேவனுடைய வண்டியானாலும் இருசில் கொழுப்பிடாமற்போனாற் சரியாய் நடவாததுபோல், குடிகள் கணக்கர்களை அநுசரிக்காமல் உரிமையான சொத்தாயிருந்தாலும் தாங்களநுபவிப்பது அசாத்தியம். (30)

(கம்) கரணமு ஸாதெயுன்னனு
கரிமதமுடிகினனு பாமுகறவகயுன்னன்
தரதேலு மீட்டகுன்னனு
கரமருதுக லெக்ககொனருகதரா சுமதீ.

(ப-ரை) சுமதீ-சுபுத்தியே ! தரன் - பூமியில், கரணமு- கணக்கனானவன், ஸாது-நல்லவனாய், ஐயுன்னனு - இருக்கினும், கரி-யானை, மதமு-கொழுப்பு, உடிகினனு-இல்லாவிடினும், பாமு-சர்ப்பமானது, கறவகயுன்னன்-கடியாமலிருந்தாலும், தேலு-தேளானது, மீட்டகுன்னன் - கொட்டாமலிருந்தாலும், கரமு-அதிகம், அருதுகன்-ஆச்சரியமாய், லெக்ககொனரு-அலக்ஷியஞ் செய்வார்கள், கதரா-அல்லவா. எ-று.

(பொ-ரை) சுபுத்தியே ! கிராமத்திலொருவனையுங் கண்டியாமலே சாதுவாயிருக்கிற கணக்கனையும், மதம்பிடியாம லொருவருக்குங்

தீங்குசெய்யாம லடங்கி பழகியிருக்கிற யானையையும், விஷத்தை யுள்ளடக்கிக்கொண்டு யாரையுங் கடியாமலிருக்கிற பாம்பையும், கொட்டாமல் பிள்ளைப்பூச்சிபோலிருக்கிற தேளையும் பூமியில் மிகவும் ஆச்சரியப்படத்தக்கதாய் அலட்சியஞ் செய்வார்கள். தடையில்லை யென்பதாம்.

(க-ரை) கண்டிப்பில்லாத கணக்கனிடத்திலும், மதமில்லாத யானையினிடத்தும், கடிக்காத பாம்பினிடத்திலும், கொட்டாத தேளினிடத்தும், உலகத்தார் லக்ஷியம் வைக்கமாட்டார்கள். (31)

(கஉ) கசுகாய கறசிசூசின
மசலக தனவகருகாக மதுரம்பகுநே
பசகலுகு யுவதுலுண்டக
பசிபாலல பொந்துவாடுபசுவுர சுமதீ.

(ப-ரை) சுமதீ - நற்புத்தியுள்ளவனே ! கசுகாய - இளம் பிஞ்சை, மசலக-பழுக்குமளவில்பொறுக்காமல், கறசிசூசின்-பல்லினாற்கடித்துப் பார்க்குங்கால், தனவகருகாகதானி-அந்த இளம்பிஞ்சுக்குள்ள துவரல்லாமல், மதுரம்பு - தித்திப்புள்ளது, அருநா-ஆகுமா, (ஆகமாட்டாது) பச-சரசம், கலுகுயுவதலு-உண்டாக்கும் வயதுவந்த ஸ்திரீகள், உண்டகன்-இருக்கையில், பசிபாலலன்-கன்னிகைகளை, பொந்துவாடு-புணரும்படியான மனிதன், பசுவுர-மிருகத்துக்குச் சமானம்.

(பொ-ரை) நற்புத்தியுள்ளவனே ! இளம்பிஞ்சு பழுக்குமளவிலும் பொறுக்காமலவசரப்பட்டு தன் பல்லினாற் கடித்துப் பார்க்குங்காலந்த விளம்பிஞ்சுக்குள்ள துவரல்லாமல் அதனிடத்திற் றித்திப்புண்டாகுமா? உண்டாகமாட்டாததுபோல், சரசகேளிக்கைகளுண்டாக்கும் பருவமுள்ள ஸ்திரீகளிருக்கையில் வயது வராத கன்னிகையினிடத்தி லின்பமுண்டாகாது. அப்படியந்த கன்னிகையினிடத்தி லின்ப நுகரும்படியான புருஷன் மிருகத்துக்குச் சமானம்.

(க-ரை) பிஞ்சை யென்றிடுங் காற் றுவரல்லாது மதுரமுண்டாகா ததுபோல இன்பந்தரு மாதரை நீங்கி யிளஞ் சிறுபெண்களைச் சேருதலின்பமில்லை. (32)

(கஎ) கவிகானிவானி வ்ராதயு
நவரச பாவம்புலேனி நாதுலவலபுன்
தவிலி சனுபந்தி ரேயனி
விவிதாயுத கௌசலம்பு வ்ருதரா ஸுமதீ.

(ப-ரை) ஸுமதீ-நற்புத்திமானே! கவி-கவீஸ்வரன், கானி வானி-அல்லாதவனுடைய, வ்ராதயுன்-எழுத்தும், நவரசபா வம்பு-நவரசங்களும் பொருந்திய மநோபாவம், லேனிநாதுல-இல்லாத ஸ்திரீயினுடைய, வலபுன்-மோகமும், தவிலி-(குண்டடிப்) பட்டு, சனுபந்தின்-தப்பிப்போகும்படியான காட்டுப் பன்றியும், ஏயனி-அடிக்கமாட்டாத, விவித-அநேகவிதமான, ஆயுத-ஆயுதங்களின், கௌசலம்புன்-பிரயோக சாமார்த்தியங்களுங்கூட, வ்ருதரா-வீணுகுங்காண். எ-று.

(பொ-ரை) நற்புத்திமானே! வித்வானல்லாதவன் பாடலெழுதுவதும், நூதன ரசிகத்துவத்தை யுண்டாக்கும் சுபாவமில்லாத மாதுடைய மோகமும், குண்டடிக்குத் தப்பிப்போகும்படியான காட்டுப் பன்றியும், பலவித பாணப்பிரயோகஞ் செய்து அடிக்கத் தெரியாத அநேகவித ஆயுதப்பிரயோகங்களும் வீணுகுங்காண்.

(க-ரை) வித்வானல்லாதவ னெழுத்தும், நவரசங்களுந் தெரியாத மாதர்களின்மே லாசையும், அகப்பட்டுத் தப்பிப்போன காட்டுப்பன்றியும், எய்யமாட்டாத வெவ்வித வாயுத சாமார்த்தியமானுலும் விருதாவென்பதாம். (33)

(கஎ) காதுஸுமீ துஸ்ஸங்கதி
போதுஸுமீகீர்த்திகாந்தபொந்தினபிதபன்
வாதுஸுமீ யப்பிச்சுட
லேதுஸுமீ வாதுலவலவுலேசமு ஸுமதீ.

(ப-ரை) ஸுமதி - நற்புத்தியுடையவனே! துஸ்ஸங்கதி - துஷ்டசகவாசம், காதுஸுமீ-தகாது, கீர்த்திகாந்த-கீர்த்தியென்னும் ஸ்திரீயானவள், பொர்தினபிதபன் - இடைத்தபிறகு,

போதுசுமீ-(நீங்கிப்) போகமாட்டாது, அப்பிச்சட-ஒருவரு க்குக் கடன் கொடுத்தால், வாதுசமீ - கலகத்துக்குக் காரண மாகும், சதுலவலவு-ஸ்திரீகளின் மோகம், லேசமூ-சற்றாகி லும, லேதுசுமீ-(உண்மையாய்) உண்டாகமாட்டாது. எ-று.

(பொ-ரை) நற்புத்தியுடையவனே! துஷ்டர்களோடு சகவாசஞ் செய்தல் தகாது, கீர்த்தியென்னும் மாது தனக்குக் கிடைத்தபிறகு தன்னைவிட்டுப் பிரிந்துபோகாது, கடனை யாருக்காகிலும் எதாவது கொடுத்தல் பின்பு கலகத்திற்குக் காரணமாகும், ஸ்திரீகளின் மோகம் கொஞ்சங்கூட வுண்மையாக வுண்டாகமாட்டாது.

(க-ரை) துர்ச்சனர் சேர்க்கையைக் கூடாதென்றும், சம்பாதித்த கீர்த்தி போகாதென்றும், கடன் கொடுத்தல் கலகத்திற்குக் காரண மென்றும், ஸ்திரீகளிடத்தை யுண்மையல்ல வென்றுங் கருத்து. (34)

(கரு) காமுகுடு தனிஸி விடிசின
கோமலிபரவிடு கவயகோருடபெல்லன்
ப்ரேமமுன ஜெருகுபிப்பிநி
ஸீமலுவெலு மூகிரட்லு சித்தமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-நல்ல புத்தியுடையவனே! காமுகுடு-ஆசையுள்ள புருஷன், தனிஸி - திருப்தியாக அநுபவித்து, விடிசினகோமலின் - நீக்கிவிட்ட மாதை, பரவிடு-மற்றொரு புருஷன், கவயன்-புணர்ச்சிசெய்ய, கோருடபெல்லன், விரும் புகிறதானது, ப்ரேமமுனன்-பிரியத்துடன், செரகுபிப்பிநின்-கருப்பஞ்சக்கைக்கு, ஸீமலு-எறும்புகள், வெலஸ்-கூட்டமாய், மூகிரட்லு - சுற்றிக்கொண்டன போலாகும், சித்தமு - இது நிச்சயம். எ-று.

(பொ-ரை) நல்லபுத்தியுடையவனே! காமமுள்ள புருஷனொரு வன் திருப்தியாக அநுபவித்து நீக்கிவிட்ட ஒரு மங்கையை மற்றொரு நாயகன் அவளைப்புணர விச்சிப்பதானது பிரியத்துடன் கருப்பஞ்சாற் றைப் பசையறப் பிழிந்துக்கொண்ட கருப்பஞ்சக்கைக்கு எறும்புகள் கூட்டங்கூட்டமாய்க் கூடிச் சுற்றிக்கொண்டதற்கு நேராகும்.

(க-ரை) காமவிச்சையுள்ள வொருவிட புருஷன் திருப்தியா யநுபவித்து நீக்கின மடந்தையை மற்றொருவ னவளைப் புணர்தல் கருப்பஞ் சக்கையை எறும்புகள் உடனே சுற்றிக்கொண்டதற்குச் சமானமாகும். (35)

(கம்) காரணமு லேனிநகவுனு [லோ
* பேரணமு லேனிலேம ப்ருதிவீஸ்தலி
பூரணமு லேனிபூரெயு [தீ.
வீரணமுலு லேனிபெண்ட்லிவ்ருதரா சும

(ப-ரை) சுமதீ-நன்னெறியுடையவனே! காரணமு-நிமித்தம், லேனிநகவுனு-இல்லாமற் சிரிப்பதும், பேரணமுனு-கச்சு, லேனிலேம-இல்லாத ஸ்திரீயும், பூரணமுலேனி-பூர்ணம்வை யாத, பூரெயு-போளியும், வீரணமுலு-வாத்தியங்கள், லேனி பெண்ட்லி-இல்லாத கலியாணமும், ப்ருதிவீஸ்தலிலோன்-பூமியின்மேல், வ்ருதரா-வீணுகுங்காண்மோ. எ-று.

(பொ-ரை) நன்னெறியுடையவனே! யாதொரு காரணமில்லாமற் சிரித்தலும், * கச்சணியாத ஸ்திரீயும், சர்க்கரை,பருப்புமுதலானவை களைச் சேர்க்காதபோளியும், நல்லவாத்தியங்களின் விசேஷமுழக்கமில்லாத கலியாணமும், பூமியின்மேற் பிரயோசனமில்லை யென்பதாகுங் காண்மோ.

(க-ரை) நிமித்தமில்லாமல் நகைத்தலும், கச்சணியா ஸ்திரீயும், பூரணம் வையாப் போளியும், வாத்தியங்களில்லாக் கல்யாணமும் வியர்த்தம். (36)

(கம்) குலகாந்த தோடநெப்புடு
கலஹிம்பகுவட்டி தப்புகடியிம்பகுமீ
கலகண்ட்ட கன்ட்டிகன்னீ [சுமதீ.
ரொலிகினசிரி யின்ட்டநுண்டநொல்லது

---

* பேரணமுலேனிலேம - * நடனஞ் செய்தலில்லாத வேசியும் என்பாருமுளர். இது சிறப்பன்று.

(ப-ரை) சுமதீ - சன்மார்க்கமுடையானே ! குலகாந்ர தோடன்-மனையாளுடன், எப்புடின் - எக்காலத்திலும், கல ஹிம்பகுமு-சண்டை செய்யாதே, வட்டி தப்பு-இல்லாத தப்பி தத்தைதை, கடியிம்பகுமீ-சுமத்தாதே, கலகண்ட்டிகண்டி -குயிற் குறளுக்குச் சமானமான குலஸ்திரீயின், கன்னீரு-கண்ணீரா னது, ஒலிகினன்-உதிருமானல், ஸிரி-சம்பத்து, இன்ட்டன்-வீட்டின்கண், உண்டநொல்லது - இருக்கப் பொருந்தாது.

(பொ-ரை) சன்மார்க்கமுடையானே ! அக்கினி சாட்சியாகக் கலியாணஞ்செய்த மனையாளுட னெக்காலத்திலுஞ் சண்டைசெய் யாதே. அவள்மீ தில்லாத வீணை குற்றங்களைச் சுமத்தாதே. குயிற் போலு மினிய மொழிகளையுடைய குலமாது அழுங் கண்ணீருதிர்ந் தால் இலக்குமியானவள், அக்குல ஸ்திரீயின் கண்ணீருதிர்ந்த அம் மனையி லிருக்கச் சகியா தகல்வாள் என்பதாம்.

(க-ரை) குலமாதின் கண்ணீருகி லம் மனையிற் சேந்திரு சேரா ளாகையாற் றன் மனையாளோடு எக்காலத்திலுஞ் சண்டைசெய் து குற்றஞ்சுமத்துவதை யொழிக்கக் கடவாய். (37)

(க-ம்) சூரிமிகல தினமுலலோ
நேரமுலென்னடுனு கலுகநேரவுமறியா
சூரிமி விரஸம்பைனனு
நேரமுலேதோசு சுண்டு நிக்கமு சுமதீ.

(ப-ரை) சுமதீ - நற்குணனே ! சூரிமி - சிநேகம், கல தினமுலலோன்-உண்டாயிருக்குங்காலத்தில், நேரமுலு-தப் பிதங்கள், எந்நடுனு-எப்போதும், கலுகநேரவு-சிநேகவிஷயத் தால் தெரியமாட்டாது, மறி-பிறகு, ஆசூரிமி-அந்தச்சிநே கம், விரசம்பு - விரோதத்தாற் கெட்டு, ஐனனு - போய்விடு மானல்,நேரமுலே-தப்பிதங்களே,தோசுசுண்டுனு-தோன்றிக் கொண்டிருக்கும், நிக்கமு-இது சத்தியம். எ-று.

(பொ-ரை) நற்குணனே! ஒருவருக்கொருவர் சிநேகிதமுண்டாயிருக்குங்காலத்திற் செய்யக்கூடாத தப்பிதங்கள் செய்தாலு மவைகள் குற்றங்களாகத் தோன்ரு. அச்சிநேகங் கெட்டு விரோதம் நேரிட்டிருக்கும்போது சரியான காரியஞ் செய்தபோதிலும் அவைகள் குற்றங்களாகவே தோன்றிக்கொண்டிருக்கும். ஆகையால் மனிதர்கள் காரியா காரியந் தெரிந்து நடந்துக்கொள்ளவேண்டும்.

(ந-ரை) சிநேகித்திருக்கும்போது யாருக்குங் குற்றந் தோன்றது, அச்சிநேகத்திற்கு விரோத நேரிட்டபோது எல்லாங் குற்றங்களாகவே தோன்றிக்கொண்டிருக்கும். (38)

(கம்) கொஞ்செபு நருசங்கதிசே
நஞ்சிதமுககீடுவச்சு நதிபெட்லன்னன்
கிஞ்சித்து நல்லிகறசின [தீ.
மஞ்சமுனகு பெட்லுவச்சு மஹிலோ சும

(ப-ரை) சுமதீ-நன்மதியே! கொஞ்செபு-அற்பகுணமுள்ள, நரு-மனிதனுடைய, சங்கதிசேன்-சிநேகத்திற்கு, அஞ்சிதமுகன்-தகுந்தபடி, கீடுவச்சுன்-கெடுதியுண்டாகும், அதி-அக்கெடுதியுண்டாதல், எட்லன்னன்-எவ்விதமிருக்கிறதென்றால், மஹிலோ - பூமியில், கிஞ்சித்து - அற்ப ஜந்துவாகிய, நல்லி - மூகட்டுப்பூச்சியானது, கறசினன் - கடித்தமாத்திரத்தில், மஞ்சமுனகுன்-கட்டிலுக்கு, பெட்லு-அடி, வச்சுன்-கிடைக்கும். (விதமாய்) எ-று.

(பொ-ரை) நன்மதியே! அற்பகுணமுள்ள மனிதரிடத்திற் சிநேகஞ் செய்தலுக்குத் தகுந்தபடி தப்பாமற் கெடுதி யுண்டாக்காமலிராது. அக்கெடுதி யெவ்விதமாக வுண்டாகுமென்றால் அற்பபிராணியான மூட்டுப்பூச்சி கடிக்கிறதினலேயே கட்டிலுக்கு கெடுதியுண்டாகுமாப்போல்.

(க-ரை) மூகட்டுப்பூச்சி சிறிது கடிக்கிறதினலே அந்த மூட்டுப்பூச்சி யிருக்குங் கட்டிலுக்கே கெடுதியுண்டாகும் விதமாய், அற்ப சகவாசஞ் செய்தவனே கெடுவான் கேண்மோ. (39)

(கம்) கொக்கோக மெல்லஜூதிவின
ஜக்கனிவாடைன ராஜசந்த்ருண்டைனன்
மிக்கிலி ரொக்கமுலிய்யக
சிக்கதுரா வாரகாந்த சித்தமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்குணமுடையானே! கொக்கோகமு-கொக்கோகசாத்திரம், எல்லன்-முழுதும், சதிவினன்-வாசித்தவனுனாலும், சக்கனிவாடு-அழகுள்ளபுருஷன், ஜூனன்-ஆயினும், ராஜசந்த்ருடு-இராஜஸ்ரேஷ்டன், ஜூனன்-ஆயினும், மிக்கிலி-அதிகமாய், ரொக்கமுன்-திரவியத்தை, இய்யக-கொடாமலே, வாரகாந்த-தாசி, சிக்கதுரா-கிடைக்கமாட்டாள், சித்தமு-இது நிச்சயம். எ-று.

(பொ-ரை) நற்குணமுடையானே! கொக்கோக முனிவர் செய்த கொக்கோக சாத்திரத்தை முழுதும் வாசித் தறிற் றேர்ந்தவனானாலும், அழகில் மன்மதனும் நாணத்தக்க புருஷனானாலும் இராசாதிராசனாயிருந்தபோதிலும், தாராளமாய்த் திரவியங் கொடாமற்போனால் வேசியினுறவு தனக்குக் கிடைக்கமாட்டா தென்பது நிச்சயம்.

(க-ரை) கோக்கோகத்தைச் சோதித்தவனாயும், நவமன்மதனாயும், சக்கிரவர்த்தியாயு மிருந்தபோதிலும் விசேட திரவியங் கொடாமல் வேசிவாராள். (40)

(கம்) கொறகானி கொடுகு புட்டின
கொறகாமியெ காதுதண்ட்ரி குணமுல
ஜெருகுது தெவ்வனுபுட்டின[ஜெருசுன்
ஜெருகுனதீ பெல்லஜெறுகு சித்தமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-நல்ல புத்தியானே! கொறகானிகொடுகு-அப்பிரயோசகனன புத்திரன், புட்டினன் - பிறந்தக்கால், கொறகாமியெகாது - தன்னுடைய அப்பிரயோசனத்தையேயல்லாமல், தண்ட்ரிகுணமுலன்-தகப்பனுடைய நல்லகுணத்தைக்கூட, செருசுன் - கெடுத்துவிடுவான், செருகுதுதன்-கரு

டம்புறாவியில், வெண்ணு-கொழுந்தாடையின் கதிரானது, புட்டி னஷ்-உண்டானால், செருகுனன்-அக்கரும்பின், தீபுஎல்லன்-தித்திப்பை முழுவதும், செருசன்-கெடுத்துவிடும், சித்தமு-இதுபிசகாது. எ-று.

(பொ-ளை) நல்ல புத்திமானே ! கரும்பின் கடையாடையின் மலர் பிறந்தால் மதுரம்பொருந்தின அக்கரும்பி னியற்கைத்தித்திப்பைக் கெடுப்பதற்கிணையாய் துஷ்டப்பிள்ளை பிறந்தக்கால் திரவிய நஷ்டமும் தன்னுடைய பிரயோசனத்தையே கெடுத்துக்கொள்வ தல்லாமல், தாய்தந்தையர்களின் நல்லகுணத்தையுங்கூடகெடுத்துவிடுமதி.

(க-ரை) கருப்பு கடையாடையின் மலர் பிறக்கும்போதே அதன் மதுரத்தைக் கெடுப்பதுபோல துஷ்டப்பிள்ளை பிறந்த வுடனே தந்தைக் குணமுங்கூடக் கேடும். (41)

(கம்) கோமலி விஸ்வாசம்புனு
பாமுலதோ ஜெலிமியந்ய பாமலவலபுன்
வேமுல தியதனம்புனு
பூமீசுலநம்மிகலுனு பொங்குர சுமதீ.

(ப-ரை) சுமதீ-சுபுத்தியே ! கோமலி-பெண்ணின், விஸ்வாசம்புனு - பிரியமும், பாமுலதோன் - பாம்புகளிடத்தில், செலிமி-சிநேகமும், அந்யபாமல் - அந்நிய ஸ்திரீகளின்மேல், வலபுன்-மோகமும், வேமுல-வேப்பமரத்தின், தியதனம்புனு-மதுரமும், பூமீசுல - அரசர்களுடைய, நம்மிகலுனு-நம்பிக்கையும், பொங்குர-பொய்யாகும். எ-று.

(பொ-ளை) சுபுத்தியே! பெண்களின் விசுவாசம் உண்மையென்று நம்பியவர்கள்மே லாசைவைத்தலும், பாம்பொடுபழகி யவைகளைச் சிநேகித்தலும், அந்நிய மாதர்களின்மேல் மோகமும், வேப்பமரத்தி னிலை காய் முதலானவைகளின் மதுரமும், இராஜாக்களின் விஸ்வாசத்தின்பேரில் நம்பிக்கையும், இவைகளெல்லா முண்மையல்ல பொய்யாகுமரோ.

(க-ரை) பெண்கள் விசுவாசமும், பாம்புகளின் சிநேகமும், அந்நிய மாதரின் மோகமும், வேம்பின் தித்திப்பும், அரசர்கள் விஸ்வாசமும் பொய். (42)

(க ம்) கடநகல மகனிஜூசின
நடுகடுகுன மடுகுலிடுது ரதிவலுதபலோ
கடநுடுகு மகனிஜூசின
நடபீநுகு வச்செநநுசுநகுதுரு சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்புத்தியுள்ளவனே! அதிவலு - ஸ்திரீகள், கடநகல-சம்பாதித்தலையுடைய, மகனின்-புருஷனை, ஜூசினன்-பார்க்குமளவிலே, அடுகடுகுனன் - அடிவைக்கும்போதெல்லாம், மடுகுலு-மடிவஸ்திரங்களைக் கொண்டு, இடுதுரு-பாதங்களைத் துடைப்பார்கள், கடந-சம்பாதனை, உடுகுமகனின்-குறைந்தபுருஷனை, ஜூசினன்-பார்க்குங்கால், நடபீநுகு-நடைப்பிணம், வச்செனு-வந்தது, அநுசுன்-என்று எண்ணிக்கொண்டு, தமலோன்-தங்களுக்குள்ளே, நகுதுரு-சிரித்துக் கொள்ளுவார்கள். எ-று.

(பொ-ரை) நற்புத்தியுள்ளவனே! ஸ்திரீகள் சம்பாதனையுடைய புருஷனை வரப்பார்க்கும்போதெல்லாம் எதிர்கொண்டுபோய், துவைத்துலர்த்தின மடிவஸ்திரங்களைக் கொண்டு பாதங்களைத் துடைப்பார்கள். சம்பாதனையில்லாத புருஷன் வரக்கண்டால் நடைப்பிணம் வந்ததென்றெண்ணிக்கொண்டு, தங்களுக்குள் தாங்களே சிரித்தவனைப் பரிகாசஞ் செய்வார்கள்.

(க-ரை) வருமானம் மிகுந்த கணவன் வரப்பார்த்து, ஸ்திரீகள் பலவித மரியாதை செய்வார்கள். வருமானமில்லாத புருஷனைப் பார்த்தபோதே நடைப்பிணம் வந்ததெனச் சொல்லி ஙைவார்கள். (43)

(க ம்) சிந்திப்பகு கடசினபநி
இந்துலுவலதுரனி நம்மகெந்தயுமதிலோ
நந்தப்புர காந்தலதோ
மந்தநமுலுமாநு மீநியெ மதமுர சுமதி.

(ப-ரை) சுமதீ-நற்குணமுள்ளவனே! கடசினபநிகின் - மிஞ்சிப்போன வேலைக்கு, சிந்திம்பதுமு - விசனப்படாதே, இந்துலு-ஸ்திரீகள், வலதுரநி-மோகிப்பார்கள் என்று, மதி

லோன்-மனஸுலோ, எந்தயுன் - எவ்வளவும், நம்மகுமு-நம்பி நீ போகாதே, அர்தப்புரகாந்தலதோன்-அர்தப்புரத்தில்வசிக்கிற ஸ்திரீகளுடன், மந்தனமுலு-ஏகாந்தமா யிருந்து இரகசியம் பேசுதல், மானுமு-விட்டுவிடு, இதியே-இஃதே, மதமுர - முன்னோர்களுடைய சம்மதம். எ-று.

(பொ-ரை) நற்குணமுள்ளவனே! நடந்துபோன விஷயத்தை நினைத்துக்கொண்டு விசனப்படாதே, மாதர்கள் தன்னை மோகிப்பார்களென மனதிலெண்ணிக்கொண் டெக்காலத்திலு நம்பி யவர்களிடத்திற் போகாதே, அந்தப்புரத்திலிருக்கிற இராஜஸ்திரீகளுடன் ஏகாந்தமாயிருந்து, ரகஸியங்களைப் பேசுதலை யொழித்துவிடு. இஃதே அறிவினர் ஆராய்ந்து கூறின சம்மதங்காண்.

(க-ரை) சென்றதைக் கருதி விசனப்படுதலும், மாதர்கள் தன்னை மோகிப்பார்களென நம்புதலும், அந்தப்புர இராஜ ஸ்திரீகளிடத்தி லிரகசியம் பேசுதலும், ஆன்றோர்கள் சம்மதமல்ல. (44)

(௪ரு) சீமலுபெட்டின புட்டலு
பாமுலகிரவைனயட்லு பாமருடு தகன்
ஹேமம்புகூட பெட்டின
பூமீசுலபால ஜேரு புவிலோ சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்புத்தியுள்ளவனே! புவிலோன் - பூமியில், சீமலு - ஈசல்கள், பெட்டினபுட்டலு - உண்டாக்கின புற்றுக்கள், பாமுலகுன்-சர்ப்பங்களுக்கு, இரவைனயட்லு - (வசிக்கும்) இடமாகிற விதமாய், பாமருடு-மூடன், தகன்-ஒப்பும்படி, ஹேமம்புன் - திரவியத்தை, கூடபெட்டினன்-சேர்த்துப் புதைத்துவைத்தபோதிலும், பூமீசுலபாலன்-அரசரிடம், சேருன்-அந்தத் திரவியஞ் சேர்ந்துவிடும். எ-று.

(பொ-ரை) நற்புத்தியுள்ளவனே! பூமியில் ஈசல்களான அற்பப் பிராணிகளாலுண்டான புற்றுக்கள் பாம்புகளுக்கு சுலபமாய் வசிக்குமிடமாகின்றனபோல், உலோபிகள் பாடுபட்டுத்தேடி தானும் அனுபவிக்காமற் திரவியத்தைச்சேர்த்துப் புதைத்துவைத்தபோதிலும், அந்தத் திரவியம் பிசகில்லாமல அரசர்பாலதாகும்.

(க-ரை) ஈசல்களியற்றிய புற்றுக்கள் சர்ப்பத்திற்கு வீடாகிய தன்மைப்போல், லோபியர்கள் நேசத்துட னீட்டிய திரவிய பா சர்ப்பாலதாகும். (45)

(கம்) சுட்டமுலு கானிவாரலு
சுட்டமுலமுநீகடன்சுஸொம்புதலிர்ப்பன்
றெட்டுகொனி யாஸ்ரயிந்துரு
கட்டிக த்ரவ்யபரு ஜேர கதரா சுமதீ.

(ப-ரை) சுமதீ - நல்லபுத்தியுடையவனே! சுட்டமுலு-பந்துக்கள், கானிவாரலு - அல்லாதவர்கள்கூட, நீகுன்-உனக்கு, சுட்டமுலமு - (நாங்கள்) பந்துக்கள், அடன்சு - என்று சொல்லி, த்ரவ்யம்பு - திரவியம், சேரன்-சேருங்கால், ஸொம்பு - சந்தோஷம், தலிர்ப்பன்-அதிசயிக்கும்படியாய், றெட்டுகொனி - பலவந்தமாகவே, கட்டிகன் - சித்தமாய், ஆஸ்ரயிந்துரு-சேருவர், கதரா - அல்லவா, எ-று.

(பொ-ரை) நல்லபுத்தியுடையவனே! திரவியமுண்டானபோது அத்திரவியஞ் செலவழியு நிமித்தம் பந்துக்க ளல்லாதவர்களுங்கூட வுமக்கு நாங்கள் பந்துக்களென்று பரிவுடன் சொல்லிக் கொண்டு அதிசயிக்கும்படி வந்தித்து பலாத்காரமாய் வந்து சேர்ந்துக்கொள்ளுவரல்லவா ஆம். (சேர்ந்துக்கொள்வார்கள்.)

(க-ரை) கைப்பொருளுறிற் பந்துக்களல்லாதவருங்கூட பந்துக்க ளுமக்கியாமென பரிவுடன் வலியவந் தணுகுவர். (46)

(கம்) சேதுலகு தொடவு தானமு
பூதலநாதுலகுதொடவுபொங்கமிதரலோ
நீதியெ தொட வெவ்வாரிகி
நாதிகி மானம்பு தொடவு நயமுக சுமதீ.

(ப-ரை) சுமதீ-சற்குணமுடையவனே! தரலோன்-பூமியின்மேல், சேதுலகுன் - (நம்முடைய) கைகளுக்கு, தொடவு-ஆபரணங்கள், தானமு-கொடைகொடுத்தல், பூதலநாதுலகுன்-அரசர்களுக்கு, தொடவு-ஆபரணங்கள், பொங்கமி - பொய்

சொல்லாமை, எவ்வாரிகின்-எவர்களுக்கும், தொடவு - ஆபரணங்கள், நீதியே-நியாயமே, நாதிகின்-பெண்களுக்கு, தொடவு-ஆபரணங்கள், நயமுகன் - நீதியாய், மாநம்பு - மானமாகும்.

(பொ-ரை) சற்குணமுடையவனே! பூமியின்மேற் கைக்கழகாவது வொருவருக்குத் தானஞ் செய்தலே யன்றி யாபரணங்களல்ல, அரசர்களுக்காபரணம் பொய்சொல்லாமல் நிதானமாயிருத்தலே யல்லாம விராச்சியமல்ல, மற்ற யாவத்திராளுக்கும் அழகாவது சத்தியமே யல்லாமல் நியாயத்தை விடுதலன்று, மங்கையர்களுக் கழகாவது மானமாயிருத்தலல்லாது தங்களை யலங்கரித்துக்கொள்வதல்ல வென்று பெரியோர் கூறுவர்.

(க-ரை) கைகளுக்குத் தானமும், அரசர்களுக்கு நடுவு நிலைமையும், மங்கையர்களுக்கு மானங்காத்தலும், யாவர்க்குஞ் சத்தியந்தவறாதிருத்த லழகாம். (47)

(சு-ம்) தடவோர்வக வொடலோர்வக
கடுவேகம்படசி படினகார்யம்பகுனே
தடவோர்ச்சின நொடலோர்ச்சின
ஜெடிபோயின கார்யமெல்லஜேகுறு சுமதீ

(ப-ரை) சுமதீ- விசேஷபுத்தியுடையவனே! தடவு - காலங்கழித்தல், ஓர்வக-சகிக்காமலும், ஒடலுஓர்வக - தேகப்பிரயாசையைச் சகிக்காமலும், கடுவேகம்பு-கடுகடுப்பாய், அடசிபடினன்-கோபத்தாலெரிந்துவிழுந்தாலும், கார்யம்பு-(தானினைத்த) வேலை, அகுனு-முடியுமா, தடவு - தாமதம்பட, ஓர்ச்சினன்-பொறுத்தலும், ஒடலு - தேகப்பிரயாசையை, ஓர்ச்சினன் - பொறுத்தலும், செடிபோயின - கெட்டுப்போகும்படியான, கார்யமு எல்லன் - காரியங்களுங்கூட, சேகுருன்-சித்தியாகு ... -ம.

( ... -ரை) விசேஷபுத்தியுடையவனே! காலந் தாழ்த்தலுக்குச் சகிக்காமலும், தேகப்பிரயாசையைத் தாளாமலும் மிகவுங் கடுகடுப்பாய்க் கோபத்தாலெரிந்து விழுந்தாலும் தானினைத்தவேலை கிரமமாய் நிறைவேறுமா? நிறைவேறாது. காலந்தாழ்த்தலுக்கும், தேகப்

பிரயாசைக்குத்தளராமல் சகித்துக்கொண்டு முயற்சிவிடாமற் செய்தாலாரம்பித்தகாரியங் கெடுவதாயிருந்தபோதிலு மொழுங்கா யநுகூலமாகவே சித்தியாகும்.

(கு-ரை) காலதாமதத்திற்கும், சரீரகஷ்டத்திற்கும், பொறுக்காமற் கடுகடுத்தா லெந்தகாரியமு மாகாது. காலந்தாழ்த்தலுக்குஞ் சரீரப்பிரயாசைக்கும் பொறுத்தால் எந்தக்காரியமானாலுங் கைகூடிவரும். (48)

(௧ம்) தனகோபமே தனசத்ருவு
தனசாந்தமே தனகு ரக்ஷ தயசுட்டம்புள
தனசந்தோஷமே ஸ்வர்க்கமு
தனதுக்கமே நரகமண்ட்ருதத்யமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-உத்தமகுணமுடையவனே! தனகோபமே-தன்னுடையகோபமே, தனசத்ருவு - தனக்குப்பகையாகும், தனசாந்தமே - தன்னுடையசாந்தமே, தனகுரக்ஷ-தனக்குசம்ரக்ஷணையாகும், தய-தனது கருணையே, சுட்டம்பு-தனக்குபந்துவாகும், தனசந்தோஷமு-தனக்குள்ள சந்தோஷமே, ஸ்வர்க்கமு-தனக்குபுண்ணியலோகம், தனதுக்கமே- தனக்குள்ள துக்கமே, நரகமு - தனக்குநரகம், அவுன்-ஆகும், அண்ட்ரு-எனச்சான்றோர் கூறுவர், தத்யமு-(இது) சத்யம். எ-று.

(பொ-ரை) உத்தமகுணமுடையவனே! தன்னுளுண்டானகோபமே தன்னைபாதிக்குஞ் சத்துருவாகும், தனதுபொறுமையே தன்னைக்காக்கும் ரக்ஷகனாகும், தன்கருணையே உறவினர்போற் றன்னை யாதரிக்கும், தனக்குள்ள சந்தோஷமே சொர்க்கமென்று சொல்லும்படி யின்பந்தரும், தனக்குள்ள துக்கமே தன்னைக்கெடுக்கும் நரகமென்றுஞ் சான்றோர் சதமாக மதித்துச்சொல்லுவர்.

(கு-ரை) தனது சினஞ் சத்துரு, சாந்தம் ரக்ஷிப்பு, தயை பந்துக்கள், சந்தோஷம் சொர்க்கம், ஆதுலம் நரகம் என்று பெரியோர் கூறினர். (49)

(கம்) தனயூரி தபசிதனமுனு
தனபுத்ருனி வித்யபெம்பு தனசதிரூபுன்
தனபெறடிசெட்டுமந்துனு [தி.
மனசுன வர்ணிம்பரெட்டி மனுஜுடு சும

(ப-ரை) சுமதீ - கலைஞானமுடையவனே! தனயூரி-தானிருக்கிற கிராமத்திலேயே செய்யும், தபசிதனமுனு- தபசியின்மேன்மையையும், தனபுத்ருனிவித்யபெம்புன் - தன்புத்திரனுடைய கல்வியின்மேன்மையையும், தனசதிரூபுன்-தன்மனையாளுடைய அழகும், தனபெறடிசெட்டுமந்துன் - தன்புறக்கடையிலிருக்கும் மூலிகையினாற் செய்யப்படும் மருந்தும், எட்டி மனுஜுடின் - எப்பேர்க்கொத்தமனிதனும், மநசுனன்-தன்மனதில், வர்ணிம்படு-தான்புகழவேமாட்டான், எ-று.

(பொ-ரை) கலைஞானமுடையவனே! தான் குடியிருக்கிற கிராமத்திலேயே நிஷ்டையிலிருக்கும் தபசியின் மேன்மையையும், தன் குமாரனுடைய வித்யாவல்லமையினதிசயங்களையும் தன் குலமாதின் ரூபலாவண்ணியாதிசயங்களையும், தனது வீட்டின் புறக்கடையில விளைந்திருக்கும் மூலிகையினாற் செய்யப்படும் அவுஷதங்களையும் எப்பேர்க்கொத்த மனிதனுந் தன்மனதிற்றான் புகழவேமாட்டான்.

(க-ரை) தனது கிராமத்திலிருக்கிற தபசியின் மேன்மையையும், தன்புத்திரன் வித்யாதிசயங்களையும், தன்மனையாளின் குணரூபங்களையும், தன் புறக்கடையிற் பயிரான மூலிகையிற் செய்த மருந்தையும், எவனுந்தன்மனதில் மேன்மையாகக்கொள்ளான். (50)

(கம்) தமலமு வேயநி நோருனு
ரமணுலசனுமொனலமீதராயனிமேனுன்
கமலமுலு லேனிகொலகுனு
ஹிமதாமுடு லேனி ராத்ரி ஹீனமு சுமதீ.

(ப-ரை) சுமதீ - சுபுத்தியே! தமலமு - தாம்பூலம், வேயனிநோருனு - போட்டுக் கொள்ளாதவாயும், ரமணுலசனுமொனலமீதன் - அழகுள்ள ஸ்திரீகளின் தனங்களின்மேல்,

ர்ாயனிமேனுன்-உராயாதசரீரமும், கமலமுலு - தாமரைகள், லேனிகொலகுனு-இல்லாததடாகமும், ஹிமதாமுடு-குளிர்ந்த சந்திரன், லேனிராத்திரி - இல்லாத இரவும், ஹீநமு-இருந்து மில்லாத தாகும். எ-று.

(பொ-ரை) சுபுத்தியே ! தாம்பூலம்போடாவாயும், அழகுபொருந்திய பெண்களின் கொங்கைகளின்மே லணையாத தேகமும், தாமரைபுஷ்பங்கள் புஷ்பித்து நிறைந்திருக்காத தடாகமும், சந்திரன்பிரகாசிக்காத விரவும், இவைக ளிருந்து மில்லாத தற்குச் சமானமாகும்.

(க-ரை) தாம்பூலமிலா வெறும் வெள்வாயும், காம்புரந் தோளியர் முலைக்கலவாமருவா மாமுடும், தாமரையில்லாத் தடாகமும், குளிர்ந்த சந்திரனில்லா விரவும் இருந்தும் பயனில்லை. (51)

(கஉ) தனவாரு லேனிசோட்டனு [டன்
ஐநுவிம்சுகலேனிசோட்ட ஜகடமுசோட்
அநுமான மைனசோட்டனு [தீ.
மநுஜுநகுனுநிலுவதகது மஹிலோ சுமதீ

(ப-ரை) சுமதீ - நீதிமானே ! மஹிலோன் - பூமியில், தனவாரு-தன்பந்துக்கள், லேனிசோட்டனு-இல்லாத இடத்திலும், சனுவு-பிரியம், இஞ்சுக-கொஞ்சமேனும், லேனிசோடன்-இல்லாதஇடத்தும், ஜகடமுசோட்டன் - சண்டைசெய்யும இடத்திலும், அநுமானமு - சந்தேகம், ஐனசோட்டனு - உண்டான இடத்திலும், நிலுவன் - நிற்பதற்கு, மநுஜுனகுனு-மனிதனுக்கு, தகது-கூடாது. எ-று.

(பொ-ரை) நீதிமானே ! பூமியில் தனக்குரித்தான பந்துக்களில்லாத விடத்திலானாலும், தன்மீதிற் கொஞ்சமேனும் பிரியமில்லாவிடத்திலானாலும், கலகமுண்டாகும்படியான விடத்திலானாலும், தன்மீதிற் சந்தேகங்கொள்ளுமிடத்திலானாலும், மனிதன் இருக்கவே கூடாது.

(க-ரை) தன் உறவினரில்லாவிடம், தன்னை விரும்பாவிடம், கலகமுண்டாகுமிடம், தன்மேல் ஐயுறுமிடம், இவ்விடங்களில் மனிதன் இருக்கலாகா. (52)

அடுத்தகம



(க-ம்) தலனுண்டு விஷமு பணிகினி
வெலயங்காதோகநுண்டு வ்ருச்சிகமுனகு
தலதோக யநகயுண்டுநு [ன்
கலுநகுநிலுவெல்ல விஷமுகதரா சுமதீ.

(ப-ரை) சுமதீ-சன்மார்க்கமுடையானே! வெலயங்கான்-பிரசித்தமாய், பணிகின்-பாம்பிற்கு, தலன்-தலையிலே, விஷமு-விஷமானது, உண்டுன்-இருக்கும், வ்ருச்சிகமுனகுன் - தேளிற்கு, தோகன்-கொடுக்கிலும், விஷமு-நஞ்சு, உண்டுன்-இருக்கும், தல-தலை, தோக-வால் அநக-என்றொரு விடங்களைக் குறிக்காது, கலுநகுன்-துஷ்டனுக்கு, நிலுவெல்லன்-தேகமெல்லாம், விஷமு-விடம், உண்டுனுகதரா-இருக்குமல்லவா. எ-று.

(பொ-ரை) சன்மார்க்கமுடையானே! ஆராயுங்கால் பிரசித்தமாய்ப்பாம்புக்கு நஞ்சு தலையினும், தேளுக்கு விஷங் கொடுக்கிலும் மாத்திரமிருக்கும். துஷ்டனுக்கோ தலை காலென்னு மிடங் குறிப்பிலலாமல் தேகமாதியந்தமும் விடத்தைப்போல கெட்டகுண மிருக்கும் அதனால் பாம்பு தேள் இவைகளைப்பார்க்கிலும் துஷ்டன் நஞ்சினுங் கொடியன் என்பதாம்.

(க-ரை) பரம்புக்கு தலையில் விடம், தேளுக்கு கோடுக்கில் விடம், துஷ்டனுக்கு அங்கமெல்லாம் விடமென்பர் பெரியோர். (53)

(க-ம்) தலபொடுகு தனமுபோசின
வெலயாலிகி நிஜமுலேது விவரிம்பங்கா
தலதடவி பாஸ ஜேசின
வெலயாலினி நம்மராது விநுரா சுமதீ.

(ப-ரை) சுமதீ - நன்மதியே! விவரிம்பங்கா - ஆராயுங்கால், தலபொடுகு - தன்னையாட்ளவாய், தனமுன் - திரவியத்தை, போசினன் - கொட்டினாலும், வெலயாலிகின் - வேசிக்கு, நிஜமு - சத்தியம், லேது - உண்டாகாது, தலதடவி-தலைமேற் கையைவைத்து, பாஸசேசினன் - பிரமாணஞ்செய்தாலும், வெலயாலின்-வேசியை, நம்மராது-நம்பக்கூடாது, விநுரா-கேண்மோ. எ-று.

(பொ-ரை) நன்மதியே! சற்றுந்தாளித்தாரராயுங்கால் நிற்கவை த்து தலையவ்வள வயரத்திற்கு தனத்தை ராசிராசியாகக் கொட்டிக் கொடுத்தாலும் வேசிக்குண்மையும் விசுவாசமும் உண்டாக மாட் டாதாகையால், தலைமேற் கைவைத்து சத்தியஞ்செய்திடினும் வேசி யை நமபவொண்ணுது மெய்யிது கேண்மோ.

(க-ரை) தலையளவான தனமீயினும், விலை மங்கையருக்கு மெய்யுடன் விஸ்வாசமுண்டாதலில்லை, யதனுற் றலைதொட்டு சத் தியஞ்செய்யினும் விலைமாதரை நம்பவொண்ணுது. (54)

(ருரு) தலமாசின ரொழுமாசின
வழுவழுமாசினனுப்ராணவல்லபுனைநன்
குலகாந்தலைனரோதுரு
திலகிம்பக பூமிலோன திரமுக சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்குணமுள்ளவனே! தலமாசினன்-தலை அழுககுடனிருத்தலையும், ஒழுமாசினன் - உடம்புமாசடைந் திருத்தலையும், வழுவழுமாசினன்-வஸ்திரங்கள் அழுக்கடைந் திருத்தலையும் உடையவன், ப்ராணவல்லபுனைநன் - பிராணப் பிரிய நாயகனுனாலும், குலகாந்தலைன் - குலஸ்திரீகள்கூட, பூமிலோனன்-பூமியில்,திலகிம்பங்கன்-உற்றுப் பார்க்குங்கால், திரமுகன்-நிச்சயமாய், ரோதுரு-அசங்கியப்படுவார்கள்.எ-று.

(பொ-ரை) நற்குணமுள்ளவனே! எண்ணெய்யிட்டு முழுகா மற் றலை யழுக்காயிருத்தலையும், குளியாமல் உடன் மாசடைந்திருந் தலையும்,வஸ்திரங்கள் தோய்க்காமலழுக்கடைந்திருத்தல பிராணப்பி ரியனுன நாயகனுடைத்தா யிருந்தபோதிலும் அக்கினிசாட்சியாய்க் கலியாணஞ்செய்த குலஸ்திரீகளுங்கூட அவனை உற்றுப் பார்ப்பதற்கு அசங்கியப்படுவார்களானல் மற்றவர்கள் அசங்கியப்படார்களா? படு வார்கள்.

(க-ரை) தலைகாய்ந்து உடலோடு கலை மாசுபடிந்திருத்தல், கொண்ட கணவர்களென்னினுங் குலஸ்திரீகளுங்கூட அசங்கியப் படுவார்கள். (55)

(க ம்) தானனுபவிம்ப நர்த்தமு
மானவபதி ஜேருகொந்த மரிபூகதமௌ
கானலநீகெலுகூர்ச்சின
தேனியயொருஜேருநட்லு திரமுகசுமதீ.

(ப-ரை) சுமதீ - சுமதியே! கானலன்-காட்டில், ஈகலு-தேனீக்கள், கூர்ச்சின - சேர்த்துவைத்த, தேனிய-தேன், ஒருன்-அந்நியனை, சேருநட்லு-சேர்வதுபோல, திரமுகன்-ஸ்திரமாய், தான்-(சம்பாதித்த) தான், அனுபவிம்பனி-அநுபவிக்காத, அர்த்தமு-திரவியம், மானவபதிகா-அரசரிடம், சேருன்-சேரும், மரி - மேலும், கொந்த - அதிற்கொஞ்சந் திரவியம், பூதகமௌன்-பூமிக்கு பங்காய்விடும். எ-று.

(பொ-ரை) சுமதியே! காட்டில் தேனீக்கள் சேர்த்துவைத்த தேனனது அந்நியர்களாகிய வேடர்களைச் சேர்வதுபோல, ஸ்திரமாய் சம்பாதித்த பொருளை தானனுபவிக்காமலும், சற்பாத்திரத்திற் செலவுசெய்யாமலும், சேர்த்துவைக்குந் திரவியம் அரசரிடஞ் சேருவதுமல்லாமல் அதிற் கொஞ்சம் யாருக்கும் உதவாதபடிக்கு பூமியின் பாலதாகும்.

(க-ரை) இன்போடு தேனீக்கள் சேர்த்த தேன் வேடர்கைக் கொண்டு செல்வதுபோற் றன்தேடியு மனுபவிக்காத தனம் அரசர்க்காம் அதிற்பாதி பூமிக்காம். (56)

(க-ம்) தக்கரகொண்டெமு செப்பெடு
ப்ரக்கடபலுகுலகுராஜுப்ரியுடைமறிதா
நெக்கு ப்ரஜ காசரின்சுட
பொக்குலகை கல்பதருவுபொடுசுடசுமதீ.

(ப-ரை) சுமதீ-நல்லபுத்திமானே! தக்கரன்-சமீபத்தில், கொண்டெமு-கோள்களை, செப்பெடு - சொல்லும்படியான, ப்ரக்கட-மந்திரியின், பலுகுலகுன்-வார்த்தைகளுக்கு, ராஜு-அரசன், ப்ரியுடை - உட்பட்டவனுய், மரி-மேலும், தான் - (அவ்வரசன்), தான், ப்ரஜலகுன் - ஜனங்களுக்கு, எக்கு - கெடு

ரிவையை, அசுரின்சுட-செய்தல், பொக்குகை-காக்காகவேண்டி, கல்பதருவன்-கற்பகவிருக்ஷத்தை, பொடிசுட-வெட்டினதற் கொப்பாகும். எ-று.

(பொ-ளை) நல்லபுத்திமானே! பக்ஷதிலிருந்துகொண்டு கோட் சொற்களைக் கூறிடும் மந்திரியின் வார்த்தைகளுக்கு அரசன் செவிகொ டுத்து அதற்குட்பட்டவனாகியும், மேலும் அவ்வரசன் தன்னுளுகை க்குட்பட்டு சொன்னபடி நடக்கும் பிரஜைகளுக்கு வீணாய் இக்கட்டு செய்வது, அடுப்புக்கரிக்காக வேண்டி விரும்பிக் கேட்டதெல்லாந் தரும்படியான கற்பகத்தருவை வெட்டிச் சாய்ப்பதற் கொப்பாகும்.

(க-ரை) அரசன் கோட்சொல்லும் மந்திரியின் சொற்கேட்டு சொன்னபடி நடக்கும் ஜனங்களுக் கிக்கட்டு செய்வது, கரிக்காகக் கற்பகத்தருவை வெட்டுங் கதையாகும். (57)

(கம) தனபதி சகுடை யுண்டின [ன்
நெனயங்காசிவுடுபிக்ஷமெத்தக வலசெ
தனவாரி கெந்த கலினா
தனபாக்யமெ தனுகாக தத்யமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-சுபுத்தியுடையவனே! தனபதி-குபேரன் சகுடை - சிநேகிதனாய், எனயங்காய்-சேர்ந்து, உண்டினன்-இருந்தபோதிலும், சிவுடு - உருத்திரன், பிக்ஷமு - பிச்சை, எத்தவலசென் - எடுக்கவேண்டிவந்தது அல்லவா, தனவாரி கின்-தன் உறவினர்க்கு, எந்தகலிகினன் - எவ்வளவு சம்பத்திருந்தாலும், தனபாக்யமே-தன்னுடைய அதிர்ஷ்டமே, தனகு காக - தனக்கு கிடைக்குமல்லாமல் அதிகம் வாராதென்பது, தத்யமு -நிஜம். எ-று.

(பொ-ளை) நவநிதிகளுமுடைய குபேரன் தனது தோழனாயிரு ந்தும் தான் அஷ்ட ஐசுவரியங்களுள்ளவனாயிருந்தும் உருத்திரன் பிச்சை யெடுக்கும் துர்அதிர்ஷ்டம் உண்டானதுபோல அப்படியே தனது உறவினர்களுக் கெவ்வளவு பாக்கியமிருந்தபோதிலும் தனக் கெவ்வளவு சம்பத்து உண்டாகவேண்டுமோ அவ்வளவுக் கல்லாமல் அதிகமாக வாராதென்பது நிச்சயம்.

(க-ரை) தனபதி தன்சிநேகிதனுகியும் அரன் பிச்சையெடுக்க நேரிட்டது. தனது உறவின ரதிக சம்பத்திலிருந்தாலும் தனது அதிர்ஷ்டமே தன்னுடைய தல்லாது ! வேறே அதிகமாகக் கிடைக்காது, (58)

(க-ம்) திருலகு ஜேயு மேலதி
ஸாரம்பகு நாரிகேள ஸலிலமு பங்கின்
கௌரவமுன மரி மீதட
பூரிசுகாவஹமு நகுநு புவிலோ சுமதீ.

(ப-ரை) சுமதீ - நற்புத்தியுடையவனே ! புவிலோன் - பூமியில், திருலகுன் - புத்திமான்களுக்கு, சேயு மேலு அதி- செய்யுமவ்வுபகாரங்கள், நாரிகேள சலிலமு பங்கின்-தேங்காய்க்குள் நீரைப்போல், சாரமகுன் - சத்துள்ளதாகும், மரி - மேலும், மீதடன் - பின்னிட்டு, கௌரவமுன-மேன்மையுடன், பூரிசுகாவஹமுன் - அதிகசுகத்தை யுண்டாக்கும்படியானதாயும், அகுனு-ஆகும். எ-று.

(பொ-ரை) நற்புத்தியுடையவனே ! பூலோகத்தில் விவேகமுள்ளவர்களுக்குச் செய்யுமவ் வுபகாரங்கள், தேங்காய்க்குள் நீரைப்போல் பலனுள்ளதாவது மல்லாமற் பிறகு பெருந்தன்மையும் அதிக சௌக்கியத்தையு முண்டாக்குவ தாகும்.

(க-ரை) புத்திமான்களுக்குச் செய்யும் உபகாரம் தேங்காயின் நீரைப்போல் பின்பு மிகவும்மேன்மைப்படுத்திவிருந்தியாகும்(59)

(க-ம்) நடுவகுமீ தெருவொக்கட
குடுவகுமீ சத்ருநிண்ட கூரிமிதோடன்
முடுவகுமீ பர தநமுல
நுடுவகுமீ யொருலமநசு நொவ்வகசுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்புத்தியுடையவனே ! ஒக்கடன் - தனியாய், தெருவு-வழி, நடுவகுமீ - நடவாதே, சத்ருநிண்டன் - பகையாளிவீட்டின்ல், கூரிமிதோடன்-பிரியமாய், குடுவகுமீ- சாப்பிடாதே, பரதனமுலன்-பிறர்பொருளை, முடுவகுமீ-திரு

டி மூட்டை கட்டாதே, ஒருலமன சு-பிறருடைய மனமானது, நொவ்வகன்-நோகும்படியாக, நடுவகும் - கடுஞ் சொற்களைக் கூருதே. எ-று.

(பொழிப்புரை) நற்புத்தியுடையவனே! ஒன்டியாய்த் தனிவழி நடவாதே, பகையாளிவீட்டினில் முழுமனதுடன்போஜனஞ்செய்யாதே, அந்நியர்பொருளை யபகரித்து மூட்டை கட்டாதே, பிறர் மன நோகும் படியான வார்த்தைகளைக் கூருதே என்பதாம்.

(கருத்துரை) தனிவழியேகுதலும், பகைவன் வீட்டி லிஷ்டத்துடன் சாப்பிடுதலும், பிறர் பொருளை வவ்வுதலும், அந்நியர் மனநோகச் சொற்களைக்கூறலுங் கூடாவாம். (60)

(கம்) நம்மரு சுங்கரி ஜூதரி.
நம்மரு மகஸாலவானி நடுவெலயாலின்
நம்மரு மங்கடிவானினி
நம்மருமீ வாமஹஸ்து நவனின் சுமதீ.

(பதவுரை) சுமதீ-நற்புத்தியுடையானே! சுங்கரின் - வரிவசூல் செய்பவனையும், ஜூதரின் - சூதாடியையும், நம்மரு-நம்பாதே, அகஸாலவானின்-தட்டானையும், நடுன்-நட்டுவனையும், வெலயாலின் - வேசியையும், நம்மருமு - நம்பாதே, அங்கடி வானின்-கடைவைத்து சரக்கு விற்போனையும், நம்மருமு - நம்பியிருக்காதே, அவனின்-பூமியில், வாமஹஸ்துன்-இடது கைப் பழக்கமுள்ளவனையும், நம்மருமீ-நம்பாதே மதி. எ-று.

(பொழிப்புரை) நற்புத்தியுடையானே! ஆயத்துறையிற் சுங்கம்வசூற் செய்பவரையும், கெடுதியைத்தருஞ்சூதாடிபவரையும், தங்கப்பணிகள் செய்யும் தட்டாரையும், தாசிகளிடத்தில் நட்டுவத் தொழிற் செய்யும் நட்டுவர்களையும், காசாசையுள்ளவேசியர்களையும், கடைவைத்து சரக்குகளை விற்போர்களையும்-இடது கையில் வேலைசெய்யும் பழக்கமுள்ளவர்களையும் பூமியிலுண்மை யுள்ளவர்களென் ளெருக்காலும் நம்பக்கூடாதென்று பெரியோர் கூறினர் காண்.

(கருத்துரை) சுங்கம்வாங்குபவர், சூதாடுகிறவர், தட்டார், வேசிகள், இடதுகையில் வேலை செய்பவர்கள்; இவர்களை நம்பவே கூடாது. (61)

(கர) நயமுன பாலுந்த்ராவரு
பபமுனநோ விஷம்முநைனபக்ஷிந்துரு
நயமெந்த தோஷகாரியொ [கா
பயமே ஜூபங்கவலயு பாருக சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்குணமுடையவனே! நயமுனன்-மிருதுபாஷையினுல், பாலுன்-பாற்கூட, த்ராவரு - குடியார்கள், பயமுனநோ - பயத்தால், விஷம்மு நைநன-விடத்தையானுலும், பக்ஷிந்துருகா-புசிப்பார்களல்லவா? நயமு - சாந்தமான வார்த்தை, எந்ததோஷகாரியோ-எவ்வளவு கெடுதிசெய்ததோ, பயமே - பயங்கரமே, பாருகன்-நன்றாய், ஜூபங்கவலயுன் - காட்டவேண்டும். எ-று.

(பொ-ரை) நற்குணமுடையவனே! நல்ல தனத்தாற் பாலானுலுங்குடிக்கமாட்டாதவர்கள், பயத்தால் கொல்லும் விஷத்தையும் பருகுவார்கள். ஆகையால் நன்னடக்கை யெவ்வளவு பாவஞ் செய்ததோ? எல்லாருக்கும் நல்லதனத்தா லாகாதகாரியம் பயஙகரங் காட்டுவதனுலேயே கைக்கூடும்.

(கு-ரை) ஜனங்கள் நல்ல தனத்தாற்பாலுங் குடியார்கள். கண்டிப்பால் விஷமானுலும் பருகுவார்கள். ஆகையால் நற்றன்மையிலாகாதகாரியங்கூட பயப்படுத்துவதனுலே யாகும் (62)

(கம) நரபதுலு மேர தப்பின
திரமொப்பகவிதவயின்ட தீர்ப்பரியைநன்
கரணமு வைதிகுடை நநு
மரணாந்தக மௌநுகானி மானது சுமதீ.

(ப-ரை) சுமதீ - நல்விவேகமுடையானே! நரபதுலு-அரசர்கள், மேர-எல்லை, தப்பினன் - கடந்தாலும், திரமொப்பகன்-நிச்சயமாய், விதவ - கைம்பெண், இன்டன் - வீட்டில், தீர்ப்பரியைனன் - காரியங்களை நியர்யமாய் முடிப்பவளானுலும், கரணமு-கணக்கன், வைதிகுடைனனு-இலௌகிகம் தெரியாதவனானுலும, மரணாந்தகமு-மரணாந்தகம் கெடுதலே, ஔநுகாநி-உண்டாகுமே அல்லாமல், மானது-இதுபிசகாது. எ-று.

(பொ-ரை) நல்லவிவேகமுடையானே! அரசர்கள் நீதிதப்பி கெட்டகாரியங்களில் பிரவேசித்தாலும், கைம்பெண்கள் வீட்டதிகாரஞ் செய்யவேற்பட்டாலும், கிராமக்கணக்கன் லௌகிகந்தெரியாதவனானாலும் தப்பாமல் மரணபரியந்தமானகெடுதிக்கு கொண்டுவருவார்களென்பது நிச்சயம்.

(க-ரை) அரசர்கள் நீதிதவறினும், விதவைகள் வீட்டதிகாரஞ் செய்யினும், கணக்கன் லௌகிகந் தெரியாதவனாகிலும் பின்னர் மரணமுடிவுத்துச் சமமானகேடுதலைச் செய்வார்கள். (63)

(க-ம்) நவரச பாவா லங்க்ருத
கவிதாகோஷ்டியுநு, மதுரகானம்புநுதா
நவிவேகி கெந்த செப்பின
ஜெவிடிகி சங்கூதிநட்லு சித்தமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்புத்தியுள்ளவனே! நவரச - நவரசங்களுடனே, பாவ-சாதுக்களால், அலங்க்ருத-அலங்கரிக்கப்பட்ட, கவிதா-கவித்துவத்தால், கோஷ்டியுன் - பிரசங்கமும், மதுர-இன்பமான, கானம்புநு - பாட்டையும், தான் - தான், அவிவேகிகின் - மூடனுக்கு, எந்த செப்பினன் - எவ்வளவுபோதிக்கினும், செவிடிகின் - செவிடர்காதில், சங்கூ - சங்கை, ஊதிநட்லு-ஊதினதுபோலாகும், சித்தமு-இது நிச்சயம். எ - று.

(பொ-ரை) நற்புத்தியுள்ளவனே! சிங்காரமுதலான நவரசாலங்காரத்துடனும், சாதுக்களாலுண்டாகிய விங்கித நாற் கவிதைகளுடனேயும், காதிற் கினிமையானசங்கீதங்களோடெங் கூடிய கீதப்பாட்டுகளை மூடரிடம்போய் மொழிதல், செவிடன் காதிற் சங்கூதிய விதமாயொன்றுந் தெரியாமல் விருதாவாகும்.

(க-ரை) நவரசத்திற்குதே நேராகிய விங்கித கவிதைகளுடனே சங்கீத கானங்களை அவிவேகரிடம் போய்ப் பகருதல் செவிடன் காதிற் சங்கூதிய தீமமாம். (64)

(க-ம்) நவ்வகுமீ வையலோபல
நவ்வகுமீ தல்லிதண்ட்ரி நாதுலதோடன்

நவ்வகுமீ பரசதிதோ
நவ்வகுமீ விப்ரவருல நயமகு சுமதீ.

(ப-ரை) சுமதீ - நல்லபுத்தியுடையவனே! ஸபலோபலன்-சபையில், நவ்வகுமீ-சிரிக்காதே, தல்லி - மாதாவிடத்திலும், தண்ட்ரி-பிதாவினிடத்திலும், நாதுலதோடன்-எசமானனிடத்திலும், நவ்வகுமீ-சிரிக்கவேண்டாம், பரசதிதோன்-அந்நியமாதுடன், நவ்வகுமீ-சிரிக்காதே, விப்ரவருலன்-பிராம்மணசிரேஷ்டர்களே, நவ்வகுமீ-பரிகாசஞ்செய்யாதே, நயமு-இதுநீதி, அகுல்-ஆகும். எ-று.

(பொ-ரை) நல்லபுத்தியுடையவனே! பலபேர்கூடி நிறைந்திருக்குஞ் சபையில் நகையாடாதே, தாய்தந்தையர்நாதனிடத்துஞ் சிரிக்காதே, அந்நிய ஸ்திரீயினிடத்தில் நகையாடேல், பிராமண சிரேஷ்டர்களிடத்திலும் பரியாசஞ் செய்யாதே, இது தான் நீதியாகும்

(க-ரை) சபையினிடத்தும், பெற்றோரிடத்தும், நாதனிடத்தும் பிறமாதர்களோடும், பிராம்மணசிரேஷ்டர்களிடமும் பரிகாசஞ் செய்யா திருத்தலே நீதியாம். (65)

(௬௰) நீரே ப்ராணு தாரமு
நோரே ரசபரிதமைன நுடுவுலகெல்லன்
நாரியெ நருலகு ரத்னமு
சீரயெ ஶ்ருங்கார மண்ட்ரு சித்தமு சுமதீ

(ப-ரை) சுமதீ - நிம்மதியான மனதுடையவனே! நீரே-தண்ணீரே, ப்ராணுத்தாரமு - உயிருக்காதாரமானது, நோரே-வாக்கே-ரசபரிதமைன-இன்பமுள்ள, நுடுவுலகெல்லன்-வார்த்தைகளுக்கெல்லாம், ஆதாரமு-ஆதரவானது, நாரியே-ஸ்திரீயே, நருலகு-மனிதர்களுக்கு, ரத்னமு-இரத்தினத்திற்கொப்பானது, சீரயே - வஸ்திரமே, ஶ்ருங்காரமு - அழகு, அண்ட்ரு-என்று சொல்லுவர், சித்தமு- இஃது உண்மை. எ-று.

(பொ-ரை) நிம்மதியான மனதுடையவனே! ஜலமானது சகல ஜீவன்களுக்கும் பிராணதாரமுள்ளது, இன்பமானவார்த்தைகளாவெ

தற்கு வாயே முக்கியமானவாதரவு, ஆடவர்களுக்கெல்லாம் பெண்டீர்க ளே இரத்தினம்போல் பவர், அலங்காரத்துக்கு வஸ்திரமே பிரதான மானதென்று பெரியோர் சத்தியமாகக் கூறுவர்.

(க-ரை) சகலபிராணிகளுக்கு நீரும், சிங்கார்வார்த்தைகளுக்கு வாயும், புருஷருக்கெல்லாம் ஸ்திரீகளும், அழகுக்கு வஸ்திரமும் ஆத ரவு என்பது சாரம். (66)

(க ம்) பகவல தெவ்வரி தோடனு
வகவங்கா வலது லேமி வச்சினபிதபன்.
தெகநாட வலது சபலநு
மகுவகு மனசிப்பவலது மஹிலோ சுமதீ.

(ப-ரை) சுமதீ - நல்லறிவு உடையவனே! மஹிலோன்- பூமியில், எவ்வரிதோடனு- எவரிடத்திலும், பக - விரோதம், வலது - வேண்டாம், லேமி - இல்லாமைத்தனம், வச்சினபித பன், நேரிட்டபிறகு அதைப்பற்றி, வகவங்கான் - விசனப்படு தல், வலது-வேண்டாம், சபலனு - அவையில், தெகன்-கடின மாய், ஆடவலது - பேசவேண்டாம், மகுவகுன் - பெண்களு க்கு, மனப-மனதிலிருக்கும் அபிப்பிராயத்தை, இய்யவலது- தெரிவிக்க வேண்டாம். எ-று.

(பொ-ரை) நல்லறிவு உடையவனே! பூலோகத்தில் எவரையும் விரோதித்துக்கொள்ளக் கூடாது, வறுமைவந்தகாலத்தில்அதைக்குறித் து நெடுந்தூரந்தானினைத்து விசனப்படக் கூடாது, பலபேர் சேர்ந்தி ருக்கும் அவையில் அலக்ஷியஞ்செய்து கடினமாகப் பேசக்கூடாது, பெண்டீர்களுக்கு தனது அந்தரங்கத்தை வெளிவிடக் கூடாது.

(க-ரை) எவரிடத்தும் விரோதஞ் செய்தலும், வறுமை வந்தக் கால் விசனப்படுதலும், அவையில் நிர்தாக்ஷிண்ணியமாய்ப் பேசு தலும், பெண்டுகளுக்கு அந்தக் கரணத்திலிருப்பதை வெளிவிடு தலும் பூலோகத்திற் கூடாவாம். (67)

(க ம்) பதிகடகு தன்னுகூர்ச்சின [குன்
சதிகடகுனு வேல்புகடகு சத்குருகட

சுறுகடகு ரிக்தஹேசதுல
மதிமந்துலு சனரு நீதிமார்கமு சுமதீ.

(ப-ரை) சுமதீ - நல்லஞாபகமுடையவனே! பதிகட குன்-அரசரிடத்திற்கும், தன்னுன்-தன்னை, கூர்ச்சினசதிகட குனு- விரும்பின ஸ்திரீயினிடத்திற்கும், வேல்ப்பு கடகுன் - தெய்வசந்நிதானத்திற்கும், சத்குருகடகுன்- பரமாசாரியனிடத்திற்கும், ஈ தகடகுன்-புத்திரனிடத்திற்கும், ரிக்தஹேசதுலன்- வெறுங்கையுடன், மதிமந்துலு - புத்திமான்கள், சனரு-போகார், நீதிமார்க்கமு-இது நியாயவழி. எ-று.

(பொ-ரை) நல்லஞாபக முடையவனே! அரசர்களைக் காணச் செல்வோரும், தன்னை உண்மையாய் விரும்பின ஸ்திரீயினிடத்திற்கு ப்போவோரும், தெய்வசந்நிதிக்குங்குரவரிடத்திற்கும் குழந்தைகளிருக்கிற விடத்திற்கும் போகும்போது புத்திமான்கள் வெறுங்கையுடன் போகமாட்டார்கள் இது நீதிசாஸ்திரம்.

(க-ரை) அரசனையும், தன்னைவிரும்பின ஸ்திரீயையும், தெய்வத்தையும், குரவனையும், குழந்தையையும், பார்க்கப்போகிறவர்கள் வெறுங்கைகளுடன் போகக்கூடாது. (68)

(௬௯) பநிவேயு நெடல தாசியு
நநுபவமுன ரம்பமந்த்ரியாலோசனலன்
தனபுக்தி யெடலதல்லியு
நநதனகுலகாந்தயுண்ட னகுரா சுமதீ.

(ப-ரை) சுமதீ-விசேஷ விவேகமுள்ளவனே! தனகுல காந்த - தனது மனையாள், பநிசேயு நெடலன் - தனக்குப் பணிவிடை செய்யும்போது, தாசியுன் - அடியாளும், அநுபவமுனன் - சுகத்தை யனுபவிக்கும்போது, ரம்ப - தெய்வரம்பையும், ஆலோசனலன் - ஆலோசனையில், மந்த்ரி - மந்திரியும், தனபுக்தி யெடலன் - தன்னை உணவுகளால் போஷிக்கும் போது, தல்லியுன் - தன்னைப் பெற்றதாயும், அனன் - என்று சொல்லும்படி, உண்டன்-இருக்க, அகுரா-வேண்டும். எ-று.

(பொ-ரை) விசேஷ விவேகமுள்ளவனே! மனைவியானவள் தன க்குப்பணிவிடையிலும் வீட்டுவேலைசெய்யும்பொழுதும் பணிப்பெண் ணாகவும், தான் அவளிடம் சுகம் அநுபவிக்குங்கால் அரம்பையெனும் அப்சரப் பெண்ணாகவும், தனக்கு ஆலோசனை சொல்லுஞ் சமயத் தில் மந்திரியாகவும், அன்னபானாதிகள் அருந்துஞ் சமயத்தில் தன் னைப்பெற்ற தாயாகவு மிருக்கவேண்டும்.

(க-ரை) மனையாள் ஊழியத்தில் அடிமையாகவும், அநுபவத் தில் அரம்பையாகவும்,ஆலோசனையில் மந்திரியாகவும்,அன்ன முத லிய வற்றால் போஷிப்பதில் பெற்ற மாதாவாகவும் இருக்கவேண் டும். (69)

(கம்) பரநாரீ சோதருடை
பரதனமுலகாஸபடக பருலகுஹிதுடை
பருலு தநு பொகட நெகடியு
பருலலிகின நலுக நதடு பரமுடு சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்குணமுடையானே ! பரநாரீ - பிறரு டைய ஸ்திரீகளுக்கு, சோதருடை - சகோதரனைப் போலும், பரதனமுலகுன் - பிறருடைய பொருள்களை, ஆசபடக-இச் சிக்காமலும், பருலகுன் - மாற்றாருக்கும், ஹிதுடை - நன் மை நினைப்பவனும், பருலு - அந்நியர்கள், தன்னுன் - தன்னை, பொகடன் - புகழ்ந்துபேசுங்கால், நெகடியுன் - பிர சித்தியடைந்தும், பருலு-அந்நியர், அலிகினன் - கோபித்தா லும், அலுகநதடு - கோபிக்காமலிருப்பவன், பரமுடு - சிரே ஷ்ட னுவான். எ-று.

(பொ-ரை) நற்குணமுடையானே ! அந்நிய ஸ்திரீகளின் விஷய த்தில் கூடப்பிறந்தவனைப் போலவும், பிறர்பொருளை யிச்சிக்காதவ னும்,பகையாளிக்குங்கூட நன்மைசெய்பவனுகவும், தன்னை அந்நியர்பு கழ்ந்துக் கொண்டிருக்கும்போததற்காகச் சந்தோஷமடையாமலும், தன்னை பிறர்கோபித்துக்கொள்ளும்போது தானும் அவர்கள்மேல் கோ பித்துக்கொள்ளாமலும் இருப்பவனே உத்தம புருஷன்.

(க-ரை) அன்னியபெண்டிரைச்சகோதரியெனவும்,பிறர்போருளின்மிசையாசையிலாதும், அன்னியர் தற்புகழினு மிகஷினுஞ் சந்தோஷமும்வெதுளியு மற்றிருப்பவனே உத்தமன். (70)

(கம்) பரஸதி கூடமி கோரகு
பரதனமுல காஸபடகு பருநெஞ்சகுமீ
சரிகானி கோஷ்டி வேஸயகு
சிரிசெடி சுட்டம்பு கடகு ஜேரகு சுமதீ.

(ப-ரை) சுமதீ - நற்புத்திமானே ! பரஸதி - பிறர்மனைவியை, கூடமின் - புணர, கோரகுமு - இச்சிக்காதே, பரதனமுலகுன் - பிறருடைய திரவியத்திற்கு, ஆசபடகுமு - ஆசைப்படாதே, பருன் - பிறரை, என்சகுமு - தூஷிக்காதே, சரிகானி - உனக்குச் சமானமில்லாத, கோஷ்டின் - கூட்டத்தில், சேயகுமு - சேராதே, சிரிசெடி - சம்பத்து கெட்டு, சுட்டம்பு கடகுன்- பந்துக்களிடம், சேரகுமு - போகாதே. எ-று.

(பொ-ரை) நற்புத்திமானே ! பிறர்மனையாளைப்புணர நீ விரும்பாதே, அந்நியர்சொத்துக்களுக் காசைப்படாதே, பிறரைத் தூஷிக்காதே, உனக்குச் சமானமில்லாதவர்களிடங்கூடாதே, உனக்கு சம்பத்தொழிந்து வறுமை யடைந்தகாலத்தில் பந்துக்களிடஞ் சேராதே.

(க-ரை) பிறர்மனையாளைப்புணரவிச்சித்தலும்,பிறர்பொருளுக்காசைப்படுதலும், பிறரைத்தூஷிப்பதும், சமானமில்லாரோடுசிநேகித்தலும், தரித்திரனகிபந்துக்களை நத்திப் போதலுங் கூடாவாம். (71)

(கம்) பரசதுலகோஷ்டி நுண்டின
புருஷுடுகாங்கேயுடைன புவிநிந்தபடுன்
பரசதி சுசீல யைனனு
பருசங்கதி நுன்னநிந்த பாலகு சுமதீ.

(ப-ரை) சுமதீ - நன்மைபொருந்தியகுணமுடையானே ! பரசதுலகோஷ்டின் - அந்நியஸ்திரீகளிடம்பேசிக்கொண்டு, உண்டின புருஷுடு-இருக்கும்மனிதன், காங்கேயுடு - பீஷ்மா

சாரியாய், ஐனன்-இருந்தபோதிலும், புவின் - பூமியின்மேல, நிந்தபடின் - நிந்தைக்கு ஆளாவான்,பரசதி- பிறமாது, சுசில- நல்நடவடிக்கையுள்ளவளாய், ஐனன் இருந்தபோதிலும், பரு சங்கதின் - அந்நியனுடைய சேர்க்கை, உன்னன் - இருக்கும் பக்ஷத்தில், நிந்தபாலகுனு, நிந்தைக்குப் பாத்திரமாகுவள். எ-று.

(பொ-ளை) நன்மைபொருந்திய குணமுடையானே ! விரும்பி அந்நியமங்கையர்பாற்பேசுங் குணமுடையபுருஷன் பீஷ்மாச்சாரியா ரைப்போல் விரதமுடையவனுனலும் வீணிந்தைக்காளாவான். பிறமா தொருவள் நன்னடக்கை யுள்ளவளாயினும் அந்நிய புருஷனிடத்தி லச்சமில்லாமற் பேசுங்குணமுடையவளாயின் பூலோகத்தில் நிந்தை க்குப் பாத்திரமாகுவள்.

(க-ளை) பீஷ்மாசாரியானுலும் அயன்மங்கையின் சகவாச த்திலிருக்கும் புருஷனும், எவ்வளவுநன்னடக்கை யுள்ளவளானுலு ம் அந்நியபுருஷ சகவாசஞ்செய்யும் மங்கையும் வீணிந்தைக்குத் தக்க பாத்திரராகுவர். (72)

(ஏம்) பறுநாத்ம தலசுசநி விடு
மறுமாடலு பலுகுசுதுல மன்னிம்பகுமீ
வெறபெவறுகனி படு நேலகு
தறுசுகசநி கவய்போகு தகது ர சுமதீ.

(ப-ரை) சுமதீ - நிதானபுத்தியுடையவனே பருன் - பரபுருஷனை, ஆத்மன் - மனதினுல், தலசுசநின் - நினைக்கும் மனைவியை, விடுமு - நீக்கிவிடு, மறுமாடலு - விரோதமான பதில் வார்த்தைகளை, பலுகு - சொல்லப்பட்ட, சுதுலன் - புத்திரர்களையும், மன்னிம்பகுமீ - மன்னிக்காதே, வெறபு - பயங்கரம், எறுகனி- தெரியாத, படுன் - வேலைக்காரனை, ஏல குமு - பரிபாலிக்காதே, தறுசுகன் - விசேஷமாய், சநின் - மனையாளை, கவயபோகுமு- புணராதே, தகதுர-அப்படிச்செ ய்வது கூடாது. எ-று.

(பொ-ரை) கிரானபுத்தியுடையவனே ! அந்நியபுருஷனையே மனதில்நினைத்துக்கொண்டிருக்கும் மனையாளை நீ நீக்கிவிடு, சொல்லும் வார்த்தைகளுக்கு விரோதமாக எதிர்த்து வார்த்தைகளைச்சொல்லப்பட்டபுத்திரர்களைத் தண்டிக்காமல் மன்னித்து விட்டு விடாதே, உனக்குப் பயப்படாத சேவகனை வேலையில் வைத்துக்கொள்ளாதே, விசேஷமாய மனையாளை யாலிங்கனஞ்செய்து புணராதே. இவைகள் தகாதசெய்கைக ளாகுமென்பது பாவனை.

(க-ரை) பரபுருஷனையே எண்ணிக்கொண்டிருக்கும் மனையாளையும், தன்னை விரோதித்து எதிர்த்துப்பேசும் புத்திரர்களையும், தனக்குப் பயப்படாத வேலைக்காரனுடைய குற்றங்களை மன்னித்தலும், அதிகமாய் மங்கையரைப் புணர்தலுங் கூடாவாம் (73)

(௭ ௰) பருலகு நிஷ்டமு வெலப்பகு
பொருகிண்ட்லகு பனுலுலேக போவகு
பரு கதிஸின சதி கவயகு [மெபுடின்
மெரிகியுபிருசைன ஹயமு நெக்ககு சுமதீ.

(ப-ரை) சுமதீ -நிறைந்தபுத்தியுடையவனே ! பருலகுன், பிறருக்கு. இஷ்டமுன் - அபிப்பிராயத்தை, செப்பகுமு - தெரிவிக்காதே, பொருகிண்ட்லகுன் - சுற்று புறமிருக்கும் வீடுகளுக்கு,பனுலுலேக - வேலையில்லாமல், எபுடின் - எக்காலத்திலும், போவகுமு-போகவேண்டாம், பருன்- அந்நியபுருஷனை, கதிஸின- சேர்ந்த,சதின் - ஸ்திரீயை, கவயகுமு - சேராதே, எரிகியுன்-தெரிந்தும், பிருசைனஹயமுன்-கெட்டகுணமுள்ள குதிரையின்பேரில், எக்க குமு-ஏறவேண்டாம். எ-று.

(பொ-ரை)நிறைந்தபுத்தியுடையவனே! பிறருக்குன்னுடையவபிப்பிராயத்தைத்தெரிவிக்காதே, சுற்றுப்புறமிருக்கும் அந்நியர்வீடுகளுக்கு அடிக்கடி வேலையொன்று மில்லாமலே போகாதே, அந்நியபுருஷனிடம் கலந்த ஸ்திரீயைச்சேரவிரும்பாதே, கெட்டகுணமுள்ள குதிரையென்று தெரிந்து மதன் மேலேற வேண்டாம்.

(க-ரை) அந்நியருக்குன்னபிப்பிராயம் வெளிவிடுதலும், வேலையொன்றுமில்லாமலே சுற்றுப்பக்கமிருக்கிற வீடுகளுக்குப் போ

துதலும்,பரபுருஷனைச் சேர்ந்த ஸ்திரீயைச் சேரலும், கெட்டகுண முள்ள துரைமின்மேலேறலுங் கூடா. (74)

(க ம்) பர்வமுல ஸதுலகவயகு
முர்வீஸ்வருகருண நம்மியுப்பகு மதிலோ
கர்விம்பநாலி பெம்பகு
நிர்வாஹமுலேனி சோட நிலுவகு சுமதீ.

(ப-ரை) சுமதீ-நீதியுள்ளவனே ! பர்வமுலன்- பருவமுதலான திதிகாலங்களில், சதுலன்-ஸ்திரீகளை, கவயகுமு - சேராதே, உர்வீஸ்வருகருணன்- அரசனுடைய தயையை, நம்மி-நம்பிக்கொண்டு, மதிலோன்-மனதில், உப்பகுமு-சந்தோஷப்படாதே, கர்விம்பன்-கர்வமடைந்திருக்குங்கால், ஆலின்-மனைவிக்கு, பெம்பகுமு - இடங்கொடாதே, நிர்வாஹமு-பிழைப்பு, லேனி சோடன்- இல்லாதவிடத்தில், நிலுவகுமு-நில்லாதே. எ-று.

(பொ-ரை) நீதியுள்ளவனே ! அஷ்டமி சதுர்த்தசி அமாவாசியை பௌர்ணிமி சங்கிராந்தி யிந்த பஞ்சபருவதினங்களில் ஸதிரீகளைக் கூடாதே,அரசன்றயை நமக்குளதென்று நம்பி மனதில்சந்தோஷப்படாதே, கர்வங்கொண்டிருக்கிற மனைவிக் கிடங்கொடாதே, பிழைப்பில்லா விடத்திற் றங்கியிராதே என்பதாம்.

(கரு) அமாவாசியை முதலானபஞ்சபருவநாட்களில் ஸ்திரீகளைப் புணருதலும், அரசன்றயையை நம்பி யுள்ளுக்குள்ளே மகிழ்தலும், கர்வங்கொண்டிருக்கும் மனையாளுக் கிடங்கொடுத்தலும், பிழைப்பில்லாவிடத்திற் காலங்கழித்தலுங் கூடாவாம். (75)

(க-ம்.) பலுதோமி வேஸ்யு விடியமு
தலகடிகின நாட்டி நித்ர தருணுலயெட
பொல யலுக நாடி கூடமி (லன்
வெலயிந்தனி செப்பராது விநுரா சுமதீ.

(ப - ரை) சுமதீ - சற்புத்தியுள்ளவனே ! விநுரா - இதைக்கேள், பலுதோமி-பல்தேய்த்தவுடனே சேயுவிடியமு -

செப்யும்தாம்பூலமும்,தலகடிகினநாடிநித்ர-எண்ணெயிட்டுமு ழுகினதினம் வரப்பட்ட நித்திரையும், தருணுலயெடலன்-இளமையானஸ்திரீயினிடம். பொலயெனுகநாட்டி - ஊடலுண்டானகாலத்தில்,கூடமி-புணர்ச்சியும், வெலயிந்தனிசெப்பராது-இவ்வளவு விலையுள்ளதென்று சொல்லக்கூடாது. எ-று.

(பொ-ரை) சற்புத்தியுள்ளவனே ! நீகேள் பல்தேய்த்துக்கொண்டவுடனே தரித்துக்கொள்ளும் தாம்பூலமும், எண்ணெயிட்டுக் கொண்டுதலை முழுகினதினம் வரப்பட்ட நித்திரையும், யௌவனமுள்ள ஸதிரீயினிடம் ஊடலுண்டாகிதீர்ந்த உடனே புணரும் புணர்ச்சிக்கும், இவ்வளவு விலையுள்ளதென்று கூறுவது கூடா தென்பதாம்.

(க-ரை) பல்தேய்த்துக்கோண்டவுடன் தரித்துக் கொள்ளுந் தாம்பூலம், எண்ணெயிட்டு தலைமுழுகின தின நித்திரை, ஸ்திரீயினிடம் ஊடல் தீர்ந்து கூடல், இவைகளுக் கிவ்வளவு விலைதானெனமதிப்பது கூடாவென்பதாம். (76)

(க-ம்.) பாடெருகனி பதி கொலுவுனு
கூடம்புன கெருகபடின கோமலிரதியுன்
பேடெத்த ஜேயு செலிமியு
நேடிகிநெதுரீதிநட்லுலென்னக சுமதீ.

• (ப-ரை) சுமதீ - நன்னெஞ்சுடையவனே ! பாடு - வருத்தம், எறுகனி-அறியாத,பதிகொலுவுனு-ஈஜமானனிடஞ்சேவிப்பதும், கூடம்புனகுன்- அரசன் சமுகத்திற்கு,எறுகபடின-தெரிந்த, கோமலி-மங்கையின், ரதியுன்-புணர்ச்சியும், பேடெத்தன்-பேதப்படுவதைப்போல்,சேயுசெலிமியுன்-செய்யும் சிநேகமும்,என்னக - ஆராயுமளவில், ஏடிகின்- ஆற்றின்வெள்ளத்துக்கு, எதுரு - எதிரிட்டு, ஈதிநட்லு - நீந்தினதற்கொப்பாகும். எ-று.

(பொ.ரை)நன்னெஞ்சுடையவனே! செய்யுங்கஷ்டந்தெரிந்துக் கொள்ளாத வெசமானனிடமுத்தியோகஞ் செய்தலும்,அரசன் சபைக்குத் தெரிந்த ஸ்திரீயினிடஞ் சம்போகஞ் செய்தலும், வித்தியாசம் விளைவிக்கும்படியான சிநேகஞ்செய்தலும், ஆராயுங்கால் ஆற்றின்

வெள்ளத்திற்கு எதிரிட்டு நீந்திப்போதலைப்போற் கெடுதியுண்டாக்கு மென்பதாம்

(க-ரை) கஷ்டந்தெரிந்துக்கொள்ளாத எசமானனிடஞ் சேவிப்பதும், சபைக்குத்தெரிந்த ஸ்திரீசம்போகமும், கௌரவத்திற்குக் கேடுதியுண்டாக்கும் சிநேகமும் யோசிக்கும் வேளையில் ஆற்றின் வெள்ளத்தை யெதிரிட்டு நீந்தும்படியான அபாயத்தை யுண்டாக்கும் (77)

(க ம்) பாலனு கலவின ஜலமுனு
பாலவிதம்புனனெ யுண்டி பரிகிம்பங்கா
பாலசவி ஜெறுசு காவுன
•பாலசுடகுவானி பொந்து வலது ர சுமதீ.

(ப-ரை) சுமதீ-நற்குணமுடையவனே! பாலனு- பாலில், கலசின-சேர்ந்த, ஜலமுனு- நீர்கூட, பாலவிதம்புனனெ- பாலைப்போலவே,உண்டி-இருந்து,பரிகிம்பங்கான்-ஆராயுங்கால், பாலசவின் - பாலினது சுவையை, செறுசுன்-கெடுத்துவிடும், காவுனன்-ஆதலால், பாலஸுடு -துஷ்டன், அகுவானி-ஆனவனுடைய- பொந்துன்-இணக்கம், வலதுர - வேண்டாங்காண். எ-று.

(பொ-ரை) நற்குணமுடையவனே!பாலிற்கலந்த நீரானது ரூபத்தில் பாலைப்போலவே சேர்ந்திருந்து ஆராயுங்கால் அந்நீரானது அப்பாலின் சுவையைக் கெடுத்துவிடும். அதுபோல் துஷ்டனுடைய சிநேகம் அநுகூலமாகவே யிருந்து அச்சிநேகனையே கெடுத்துவிடுவான் ஆகையால் துஷ்டர்களிடஞ் சகவாசஞ்செய்யக்கூடாது.

(க-ரை) பாலிற்கலந்தநீர் உருவத்திற்பாலைப்போலிருந்தும் அந்தப்பாலைக்கெடுத்துவிடுவதைப்போல் துஷ்டசகவாசம் அந்தசகவாசஞ் செய்பவர்களையே கெடுக்குமாதலால் துஷ்டசகவாசஞ்செய்ய லாகாது. (78)

(க ம்) பாலசுன கைன யாபத
ஜாலிம்படி தீர்ப்பவலது சர்வக்ஞுனகுன்
தேலக்னி படக பட்டின
மேலெறுகுநெ மீட்டுகொக மேதினி சுமதீ.

(ப-ரை) சுமதீ - நன்மையானபுத்தியுடையவனே! பால சுனகுன்-மூர்க்கனனவனுக்கு, ஜனயாபதன்-உண்டான கஷ் டத்துக்கு, ஜாலிம்படி-பரிதாபப்பட்டு, சர்வக்ஞுனகுன்-முழு தும் தெரிந்தவர்க்கானலும், தீர்ப்பன்-தீர்க்க, வலது-கூடா து, மேதினின்-பூமியின்மேல், தேலுன்-தேளானது, அக்னின்- நெருப்பில், படகன்-விழும்சமயத்தில்- பட்டினன் - தீயில் வி ழாமல் காப்பாற்றப்பிடித்தால், மீட்டுகாக-கொட்டுமேயல்லா மல், மேலு-உபகாரத்தை, எறுகனே-அது அறிந்துகொள்ளு மா? எ-று

(பொ-ரை) நன்மையானபுத்தியுடையவனே! தேளானது நெருப்பில் விழுஞ்சமயத்தில் தீயில் விழாமற்காப்பாற்ற அதைப்பிடித்தவனையுங் கூடதனக்குபகாரஞ்செய்தானென்பதையறியாது கொட்டுவதுபோல் மூர்க்கனனவனுக் கேதாவது ஆபத்துண்டானபோது பரிதாபப்பட்ட வனுக்கவ்வாபத்தைத்தீர்த்து சகாயஞ்செய்தவனுக்குங்கூட கெடுதிசெ ய்வானுகையால் எவ்வளவு சர்வக்ஞுத்தவமுடையவனுனலும் அவனு க்குச் சகாயஞ் செய்யக்கூடாது அப்படிச் செய்தால் உடனே அவன் கெடுதிசெய்யாமற் போகான்.

(க ரை) தேள்தீயில் விழும்போது விழாமற்பிடித்ததவனையுங் கூடகொட்டுவதுபோல துஷ்டன் கஷ்டப்படுஞ்சமயத்தில் தனக் குச்சகாயஞ்செய்தவனுக்குங்கூடக்கெடுதிசெய்வானுகையால் முற்று முணர்ந்தவனுயினு மவனுக்குச்சகாயஞ்செய்யக்கூடாது (79)

(கம்) பிலுவனி பனுலகு போவுட
கலபனி வஸதிகலுப ராஜுகானனிகொலு
பிலுவனி பேரண்டம்புனு [வுன்
வலவனிசெலிமியுனு ஜேயவலதுர சுமதீ.

(ப-ரை) சுமதீ-நன்னெறியுடையவனே! பிலுவனிபனுல குன்- (தன்னை) கூப்பிடாதவேலைகளுக்கு, போவுட (தானய்) போதலும், கலயனி-(தன்னுடன்)கலக்காதிருக்கும், ஸ்திரீ-ம னைவியின், கலுபுன்-புணர்ச்சியும், ராஜு-ராஜபானன், கானனி- பார்க்காத, கொலுவுன்-உத்தியோகமும், பிலுவனி-கூப்பிடா

பலே, பேரண்டம்புனு - விருந்துக்கு போகிறதும், வலவனி-சரியல்லாத, செலிமியுனு - சிநேகமும்,சேயவலது - (எப்போதும்)செய்யவேண்டாம். எ-று.

(பொ-ரை) நன்னெறியுடையவனே! யாதாமொருவர்தன்னைக் கூப்பிடாதகாரியங்களுக்குத் தானேதலையிட்டுக்கொண்டுபோதலும், தன்னுடன் மனங்கலவாதிருக்கும் மனைவியின் புணர்ச்சியும்,எஜமானனைப்பார்க்கநேரிடாத உத்தியோகமும், கூப்பிடாமலேபலவந்தமாய்விவாகம், விருந்து முதலிய வற்றிற்குப்போகிறதும், தனக்குச்சரியல்லாதவரிடஞ் செய்யுஞ் சிநேகமும் காலத்திரயத்திலுஞ் செய்யவொண்ணாது.

(க-ரை) கூப்பிடாதவேலைகளுக்குப்போதலும், மனங்கலவாத மனையாளைச்சேரலும், எஜமானனையறியாத வுத்தியோகமும்,கூப்பிடாமலே விருந்துமுதலியவற்றிற்குச்செல்லலும், சரியல்லாதசிநேகஞ்செய்தலுங் கூடாவாம். (60)

(கம்) புரிகின் ப்ராணமு கோமடி
வரிகின்ப்ராணம்புநீரு வசுமதிலோனன்
கரிகின்ப்ராணமு தொண்டமு
சிரிகின்ப்ராணம்பு மகுவ சித்தமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-சற்குணனே! வசுமதிலோனன்- பூமியில், புரிகின் -பட்டணத்திற்கு,கோமட்டி-கோமுட்டி (வைசியன்) ப்ராணமு-உயிருக்குச்சமானம், வரிகின்-நன்செய்நிலத்துக்கு - நீரு, தண்ணீர், ப்ராணம்பு-ப்ராணனுக்குச் சமானம், கரிகின்-யானைக்கு, தொண்டமு-துதிக்கை, ப்ராணமு-உயிருக்குச் சமானம், சிரிகின்-சம்பத்துக்கு, மகுவ-இல்லாள், ப்ராணம்பு-ப்ராணத்துக்குச் சமானம், சித்தமு-இதுநிச்சயம். எ-று.

(பொ-ரை) சற்குணனே : பூமியின்கண் கிரயவிக்கிரயங்களால் பட்டினத்திலுள்ளவர்களுக்கு கோமுட்டி முதலானவைசியர்கள் ப்ராணம் போல்பவர். செழிப்பாய் விளைவிக்கிறதினால் நன்செய் நிலத்திற்குத் தண்ணீரானது உயிருக்குச்சமானம், முக்கிய அவயவமானதால் யானைக்கு துதிக்கை பிராணாதாரமுள்ளது, எல்லாச் சுபகாரியங்களுக்

கும் முக்கியமா யிருப்பதனுல் சம்பத்திற்கு சுமங்கலியான இல்லாள் பிராணத்துக்குச்சமானம் என்பது பிரமாணம்.

(க-ரை) பட்டினத்துக்குவைசியர்களும்,நெல்விளையும் பயிருக்குத்தண்ணீரும், யானைக்குத் துதிக்கையும், சம்பத்துக்கு இல்லாளும் பிராணத்திற்கொப்பென்பது சித்தாந்தம். (81)

(க.ம்) புலிபாலு தெச்சி யிச்சின
நலவடகா குண்டகோசி யறசேநிடினன்
தலபொடுகு தனமு போசின
வெலயாலிகிகூர்மிலேது விநுரா சுமதீ.

(ப-ரை) சுமதீ-நல்லபுத்திமானே! புலிபாலு-புலியின்பாலை, தெச்சி-கொண்டுவந்து, இச்சினன்-கொடுத்தபோதிலும், அலவடகான் தக்கபடி, குண்டெ-ஈரலை, கோசி-அறுத்து, அறசேன்-உள்ளங்கையில்,இடிநன்-வைத்தபோதிலும்,தலபொடுகு-தலையளவுயரம், தனமுன்.திரவியத்தை, போசினன்- கொட்டினுலும், வெலயாலிகின்-வேசிக்கு கூர்மி-பிரியம், லேது-உண்டாகாது, விநுரா-கேள்.எ.று.

(பொ-ரை) நல்லபுத்திமானே! தனக்கு சாத்தியப்படாத துஷ்டமிருகமாகிய புலியை வசப்படுத்தி யதன்பாலைக்கொண்டுவந்து கொடுததாலும், அதன்பிராணுதாரமான ஈரலை யறுத்துள்ளங்கையில் வைத்தபோதிலும், அல்லது நிற்கவைத்து தலையளவு உயரம் தனத்தைக் கொட்டிக் கொடுத்தாலும் வேசிக்கெப்போதும் உண்மையான விஸ்வாசம் உண்டாகவே மாட்டாதென்று தெரிந்துகொள்.

(கரை) கிராதக ஜந்துவானபுலியின் பாலைக்கறந்தானுலும், அதனீரலையறுத்துக்கோண்டுவந்துகோடுத்தாலும், திரவியத்தைதலையுயரந்தவியக் கொட்டிக்கோடுக்கினும் வேசிக்கு விசுவாச முண்டாகாது. (82)

(க.ம்) பெட்டின தினமுல லோபல
நட்டடவுல்கைன வச்சுநாநார்த்தமுலுன்
பெட்டனி தினமுல கனகபு
கட்டெக்கினநேமிலேதுகதரா சுமதீ.

(ப-ரை) சுமதீ-நல்லபுத்தியுடையவனே! பெட்டினதின மூலலோபலன் - கொடுத்துவைத்தகாலங்களில், நட்டடவுல தைனன்-நடுக்காட்டிலிருந்தாலும், காகார்த்தம்புலு-சமஸ்தத்திரவியங்களும்,வச்சுன்-தற்செயலாய்வந்துசேர்ந்து கொண்டிருக்கும், பெட்டனிதினமுலன் - கொடுத்துவைக்காதகாலங்களில், கனகபுகட்டு-பொன்மலையின்பேரில், எக்கினன்-ஏறிக்கொண்டிருந்தாலும், ஏமிலேதுகதரா - ஒன்றுங்கிடைக்கமாட்டாதல்லவா.எ-று

(பொ-ரை) நல்லபுத்தியுடையவனே! பூர்வஜன்மத்தில் தானதருமங்கள் செய்ததனுற் கொடுத்து வைத்த நற்காலங்களில் நிர்மானுஷ்யமான கானகத்தின் மத்தியிற் போயிருந்தபோதிலும் சகல சம்பத்தும் முயற்சியின்றியே வந்து சேரும், முன் ஜனனத்தில் பாதகங்களைச் செய்ததனுற் கொடுத்து வைக்காத கெட்டகாலங்களில் பொன்மயமான மேருமலையிலேறிக் கொண்டிருந்தாலும தீவினைப் பயனு லங்கொன்றுங் கிடைக்கமாட்டாது.

(கு-ரை) பூர்வஜன்மத்தில் கொடுத்து வைத்திருந்தால் கானகத்தின்மத்தியிலானுலும் பலவிதசம்பத்தும் உண்டாகிக்கொண்டு வநும், கொடுத்து வைக்காவிட்டால் பொன்மலையிலேறி யிருந்தபோதிலும் அதிலொன்றுங் கிட்டாது. (83)

(க.ம்) பொருகுன பகவாடுண்டின
நிரவொந்தகவ்ராத காடெயேலிகயைன
தரகாபு கொண்டெ மைனனு [ன்
கரணுலகு ப்ரதுகுலேது கதரா சுமதீ.

(ப-ரை) சுமதீ-சற்குணமுடையானே! பொருகுனன்-பக்கத்தில், பகவாடு-பகைபாளி, உண்டினென் - இருந்தாலும், இரவொந்தகன்-உறுதியாக,தபன்-பூலோகத்தில்,வ்ராதகாடெ-எழுதத்தெரிந்தவன்,ஏலிக-எஜமானனுக,ஜநன்-இருந்தபோதிலும், காபு-குடியானவன், கொண்டெமைனனு-கோள்சொல்பவனுயிருந்தாலும், கரணுலகுன் - கணக்கர்களுக்கு, ப்ரதுகு-ஜீவனம், லேதுகதரா-உண்டாகாது.எ-று.

(பொ-ரை) சற்குணமுடையவனே! தனக்கு சமீபத்தில் பகையாளியிருந்தபோதிலும், ஸ்திரமாய் பூமியில் தன்னைப்போல் எழுதத் தெரிந்தவனே எஜமானனுக விருந்தபோதிலும், பயிரிடுங் குடியானவனே கோள் சொற்களைக் கூறுபவனுயிருந்தாலுங் கணக்கர் களுக்குப் பிழைப்புண்டாவது அரிது என்பதாம்.

(க ரை) பகையாளி பக்கத்துவீட்டிலிருப்பினும், கணக்கேழுதுபவனே அதிகாரியானுலும் குடியானவனே கோட்சொல்பவனுயினும் கணக்கர்களுக்கு ஜீவனங் கிடையாது. (84)

(க ம்) பங்காரு குதுவ பெட்டகு
சங்கரமுனபாறிபோர்குசரசுடவைதே
ஙங்கடி வெச்சமு லாடகு [சுமதீ.
வெங்கலிதோஜெலிமிகொனகு விநுரா

(ப-ரை) சுமதீ-சற்குணமுடையவனே ! பங்காரு-பொன்னே, குதுவபெட்டகுமு-கொதுவை வைக்காதே, சங்கரமுனன்-போரில், பாறிபோகுமு-ஓடிப்போகாதே, சரசுடவு-ரசிகனுக, ஐதேனி- இருந்தக்கால், அங்கடின்-கடையில், வெச்சமுலு - கடன்வியாபாரம், ஆடகுமு - செய்யாதே, வெங்கலிதோன்-மூர்க்கரோடு, செலிமி-சிநேகம், கொனகுமு - கொள்ளாதே, விநுரா-கேள்.எ-று.

(பொ-ரை) சற்குணமுடையவனே ! வறுமையுற்ற காலத்திற் பொன்னைக் கொதுவை வையேல். போர்முனையிலிருந்து வீரத்தனங்கெட்டு முதுகுகாட்டியோடேல். கடையில் கடன் சொல்லி பேரஞ் செய்யேல். இஷ்டப்பிரகாரம் மூர்க்கரோ டிணங்கேல். இவைகளைக் கவனிக்கக்கடவாய்.

(க-ரை) பொன்னைக் கொதுவைவைத்தலும், போர்முனையிற் புறமிட்டோடலும். கடையில் கடனுகபேரஞ்செய்தலும் அவிவேகருடன் சிநேகஞ்செய்தலும் மானமுள்ளவனுக்குக் கூடாவாம்,( 85)

(க ம்) பலவந்துட நாகேமனி
பலுவுரதோநிக்ரஹின்சிபலுகுடமேலா

பலவந்தமைன சர்ப்பமு
சலிசிமலசேதஜிக்கி சாவதெ சுமதீ

(ப-ரை) சுமதீ - விசேஷபுத்தியுடையவனே! பலவந்துடன்- பலமுள்ளவன், நாகுன்-எனக்கு, ஏமி-என்னகுறை, அனி-என்றுநினைத்துக்கொண்டு,பலுவுரதோன்-பலருடன், நிக்ரஹின்சி-விரோதித்து, பலுகுட - பேசுவதானது. மேலா-நல்லதா? பலவந்தமு-பலமுடையதா, ஜைசர்ப்பமு - இருந்தபாம்பானது, சலிசீமலசேதன் - குளிர்ந்த இடத்தில்திரியும் கடிக்கமாட்டாத கறுப்பு எறும்புகளிடம், சிக்கி-அகப்பட்டுக் கொண்டு, சாவதெ-சாகவில்லையா எ-று.

(பொ-ரை) விசேஷபுத்தியுடையவனே! நான் பலமுள்ளவன் எனக்கென்ன குறையென்று நினைத்துக் கொண்டு கர்வப்பட்டுபலருடனெதிர்த்து விரோதஞ்செய்துக்கொண்டு பேசுதலானது நல்லதல்ல, பாம்பானது பலமுள்ளதானாலும் அற்ப பிராணியாய் குளிர்ந்தவிடங்களில் சஞ்சரித்துக்கடிக்கமாட்டாத கறுப்பெறும்புகளிடம் அகப்பட்டுக்கொண்டு சாவதை நாம் காணவில்லையா.

(கு-ரை) மிகவும் பலமுள்ள பாம்பானது சிறிய கறுப்பெறும்புகளிடம் அகப்பட்டுக்கொண்டு சாதுமாகையால் நான்மிகவும் பலாஷ்டிய னெனக்கென்னபயமென்று பலரையும் விரோதித்துப்பேசுத லழகல்ல. (86)

(க-ம்) மண்டலபதிசம்முகமுன
மெண்டைனப்ரதானிலேகமேலகுட யெ
கொண்டந்த மதபு டேனுகு [ல்லன்
தொண்டமுலேகுண்டிநட்லுதோசுரசுமதீ

(ப-ரை) சுமதீ - உத்தமகுணமுடையவனே! மண்டலபதி-அரசனுடைய, சம்முகமுனன்-சமுகத்தில், மெண்டு-பெருந்தன்மையுள்ள, ப்ரதானிலேக - மந்திரியில்லாமல், மேல குட யெல்லன் - காரியம்நடத்தலெல்லாம், கொண்டந்தமதபுடேனுகு-மலையையொத்தபதமுள்ளயானை,தொண்டமுலேக-துதி

...யல், உண்டிநட்லு-இருக்கிறவிதம்போல். தோசுர-
...நான்றும் எ-று.

(பொ-ரை) உத்தமகுணமுடையவனே! மண்டலாதிபதியானு
லும், தன்சமுகத்தில் பெருந்தன்மையுள்ள மதிமந்திரியொருவனில்
லாமற் காரியங்களை நடாத்துதல் மலைப்போலொத்தபெரிதான மதம்
பிடித்தயானைக்கு துதிக்கையில்லாம லிருந்தா லெவ்வண்ணமிருக்கு
மோ அவ்வண்ணமாகும்.

(க-ரை) யானைமலை யவ்வளவு பெரிதானாலு மதந்துத்ததுந்த
துதிக்கையில்லாமல் பிரகாசிக்காததுபோல்,அரசன் மன்டலாதிபதி
யானாலும் பெருந்தன்மையுள்ள மந்திரியில்லாமற் பிரகாசியான்
என்பதாம். (87)

(க-ம்) மந்த்ரி கலவானி ராஜ்யமு
தந்த்ரமுசெடகுண்ட நிலுசுதறுசுக தர
மந்த்ரிவிஹீநுனி ராஜ்யமு [லோ
ஜந்த்ரமுகீலூடிநட்லு ஜருகது சுமதீ.

(ப-ரை) சுமதீ - கலைஞானமுடையவனே! மந்திரி-
மந்திரியை, கலவானி- உடைத்தான அரசனுடைய, ராஜ்ய
மு-ஆளுகை, தந்த்ரமு-ராஜகாரியங்கள், செடகுண்ட-நன்மா
ர்க்கத்தினின்றுங் கெடாமல், நிலுசுன்-உறுதியாக நிலைநிற்
கும், தரலோன்-குவலயத்தில். தறுசுகன்-பெரும்பாலும், மந்
த்ரிவிஹீநுனி-மந்திரியில்லாத அரசனுடைய, ராஜ்யமு-ராஜ
ரீகம், ஜந்த்ரமு-யந்திரத்தின், கீலூடிநட்லு-கீல்கழன்று போ
னமாதிரியாய், ஜருகது-நடவாது.எ-று.

(பொ-ரை) கலைஞானமுடையவனே! நல்ல மந்திரியை யுடைத்
தான விராஜனுடைய வாளுகை மறுநெறிபிசகாமலும் நீதிமார்க்கந்
தவறாமலும் உறுதியாகநிலைநிற்கும், பூலோகத்தி லநேகமாய் மந்திரி
யில்லாத வரசனுடையராச்சியம் சுலபமாய்செய்யும் படியான யந்தி
ரத்தினுடைய சுள்ளாணிகழன்று போனவிதமாய் கிரமமாய் நடக்க
மாட்டாது.

(க-ரை) மந்திரியுள்ளவரசனுடைய ராஜரீகம் நன்றாய் நடக்கு
மல்லாமல் மந்திரியில்லாவரசனுடைய ராஜரீகமானதுகீல் கழன்ற
யந்திரம்போல் கிரமமாய் நடவாதென்பதாம். (88)

(கம்) மாட்டகு ப்ராணமு சத்யமு
கோட்டகுப்ராணம்பு சுபப்படகோட்டி த
போட்டிகி ப்ராணமுமானமு [த்ரின்
சீட்டிகிப்ராணம்பு வ்ராலுசித்தமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-சுபுத்தியே! தரித்ரின்-தரணியில், மாட்டகுன்-சொற்களுக்கு சத்யமு-உண்மை; ப்ராணமு - ஜீவன், கோட்டகுன் -நகரத்தின் கோட்டைக்கு. சுபட-நல்லவீரமு டையா காலாட்களின், கோட்டி-கூட்டங்கள், ப்ராணமு-உயிரையொத்தது, போடிகின்-பெண்டுகளுக்கு, மானமு-கற்புடைமையே, ப்ராணமு-பிராணனையொத்தது, சீட்டிகின் - கடன் பத்திரமுகலானவைகளுக்கு, வ்ராலு-கையொப்பம், ப்ராணம்பு-ஜீவனையொத்ததாகும், சித்தமு-இதுநிச்சயம்.ஏ-று.

(பொ-ரை) சுபுத்தியே! பூமியில் வார்த்தைகளுக்கு சத்தியந்தவறாதிருத்த லுயிருக்குச்சமானம், நகரத்தின் கோட்டைக்கு நல்ல வீரமுள்ள விராணுவச்சேனைக் கூட்டங்களிருத்தல் பிராணனுக்குச சமானம், பெண்டுகளுக்கு நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் கற்புடைமையாயிருத்தலே ஜீவனையொத்தது. சீட்டு முதலானபத்திரங்களுக்கு கையொப்ப முடைத்தாயிருத்தல் பிராணனுக்குச் சமானமாகும் அவையில்லையேல் பிரயோஜனமில்லையென்பது சாரம்.

(கு-ரை) சொற்களுக்கு யதார்த்தமும், கோட்டைக்கு சைன்னியங்களும் பெண்டுகளுக்கு மானமும், சீட்டு பத்திரங்களுக்கு கையொப்பமும் ஜீவனாகும் (89)

(கம்) மாநகனு டாத்ம த்ருதிசெடி
ஹீநுண்டகுவானி நாஸ்ரயின்சுடயெல்
மாநெடு ஜலமுலலோபல [லன்
நேநுகுமயிதாச்சிநட்டிலுலெறுகுமு சுமதீ.

(ப-ரை) சுமதீ -நீதிமானே! மாநகநுடு-கம்பீரவெண்ணத்தால் பெருந்தன்மையுடையவன், ஆத்மன்-மனதில். த்ருதி செடி - தைரியங்கெட்டு, ஹீநுண்டு அகுவானின் - அற்பனை, ஆஸ்ரயின்சுட.. அடைதலானது, எல்லன்-அவ்வளவும், மாநெ

...யளவுள்ள. ஜலமுலலோபலன் - ஜலத்தில், ஏறுகு-யா ...பானது, மயின்-தன் சரீரத்தை-தாச்சிட்டு, மறைத்தது போலாகும், எறுகுமு-நீயிதை தெரிந்துக்கொள்.எ-று.

(பொ-ரை) நீதிமானே! மிகுந்தயானமுள்ளவன் தன்னுடைய தைரியத்தை விடுத்து அற்பனை யடைதலானது ஒரு நாழியளவுள்ள ஜலத்தில் யானையானது முழுகி யதன் சரீரத்தை மறைத்ததுபோலாகும், நீ இதன் அருத்தத்தைதெரிந்துக்கொள்ளக்கடவாய் என்பதாம்.

(க-ரை) மானமுள்ளவன் அற்பனைச் சேருதலொரு நாழியளவுள்ள ஜலத்தில் யானையானது முழகி தன்உடலை மறைத்துக்கொண்டதற்குச்சமானமாகும். (90)

(௯௰௧) ராபொம்மனி பிலுவனியா
பூபாலுனிகொல்வபுக்திமுக்த்துலுகலவே
தீபம்பு லேனி.யிண்டனு
சேபுனகிள்ளாடிநட்லுசித்ரமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-சன்மார்க்கமுடையானே! ரா-வா, பொம்மு-போ, அனி-என்று, பிலுவனி-தன்னைக்கூப்பிடாதிருக்கும், ஆபூபாலுனின்-அவ்வரசனை, கொல்வன்- சேவித்தால், புக்தி-சாப்பாடும். முக்திலு-மோக்ஷமாயினும், கலவே-உண்டாகுமா, தீபம்பு-விளக்கு, லேனியிண்டனு-இல்லாதவீட்டில். சேபுன கிள்ளாடி நட்லு-கைகளை நீட்டியும் மடக்கியும் பிசைந்ததற்கொப்பாகும், சித்ரமு-இஃதுண்மை.எ-று.

(பொ-ரை) சன்மார்க்கமுடையானே! விளக்கில்லாத வீட்டில் கைகளைமுடக்கியும், நீட்டியும் தடவியும் ஆடும்படியான கைப்பிடியானவாட்டம் எப்படி கையிலகப்படாதோ அப்படி தன்னைவாபோவென்று கூப்பிட்டுநல்வார்த்தையில்லாத பிரபுவினிடத்திற் சேவகஞ் செய்தல் இம்மையின் சுகாநுபவங்களும் மறுமையில் மோக்ஷசாம்பிராசியங்களும் கிடைக்கமாட்டா.

(க-ரை) விளக்கில்லாத வீட்டிலாடும் கைப்பிடியாட்டத்தில் கைப்பிடியகப்படாதது போல் அன்பான வார்த்தைகளில்லா பிரபுவினிடஞ் சேவிக்கிறதினால் இகபரமிரண்டும் அகப்படா. (91)

(க-ம்) ரூபிம்சி பலிகிபொங்ககு
ப்ராபகு சுட்டம்புநெக்குபலுககுமதிலோ
கோபிம்சுராஜு கொல்வகு
பாபபு தேசம்பு சொறகு பதிலமு சுமதீ.

(ப-ரை) சுமதீ-நன்மதியே! ரூபிம்சி-ரூபித்துக் காட்டி, பலிகி-சொல்லி, பொங்ககு, பொய்பேசாதே, ப்ராபு-ஆதரித்து-அகுசுட்டம்புன்- இருக்கிறயந்துக்களையும், சக்கு-முறைவாக, பலுககுமு-பேசாதே, பதிலோன்-பனதில்,கோபிம்சுராஜு-கோபத்தையுடைத்தான அரசயிடத்தில்,கொல்வகுமு-ஊழியஞ்செய்யாதே, பாபபுதேசம்புன் - பாவத்தொழில்களுள்ள வூரில்,சொறகுமு-பிரவேசிக்காதே, பதிலமு - பத்திரங்காண். எ-று.

(பொ-ரை) நன்மதியே! முதலில்நிச்சயித்துச்சொல்லி பிறகு பொய்ப்பேசாதே, தனக்காதாரமாய் நெருங்கினபந்துக்களாயிருக்கின்றவர்களைக்குறித்து குறைவாகப்பேசாதே, மனதிலெப் போதுங் கோபிக்கும் குணங்களுடைய வரசனிடஞ் சேவிக்காதே,பாவகிருத்தியங்கள் நடக்கும் பரதேசங்களுக்குப்போகாதே, பத்திரமாயிருவென்பதாம்.

(க-ரை) முன்நிச்சயஞ் செய்து பின் பொய்பேசுதலும், தனக்காதாரமான பந்துக்களைக்குறித்துக் குறைகூறுதலும், கோபிக்குங் குணமுடையவரசனிடஞ் சேவித்தலும், கெடுதி யுண்டாகு மிடத்திற் பிரவேசித்தலுங் கூடாவாம். (92)

(க-ம்) லாவு கலவானி கன்டெனு
பாவிம்பக நீதிபருடு பலவந்துண்டெ வ
க்ராவம்பந்த கஜம்புனு
மாவடிவா டெக்கிநட்டு மஹிலோ சுமதீ.

(ட-ரை) சுமதீ- நல்லவிவேகமுடையவனே! மஹிலோன்-பூமியில், க்ராவம்பந்தகஜமுனு-மலையைப்போன்றயானையை, மாவடிவாடு-யானைப்பாகனானவன், எக்கிநட்டு-ஏறிநடத்தும் விதமாய், பாவிம்பகன் - யோசிக்குங்கால், லாவுகலவானிகம்

...மு - சரீரபலத்தையுடையவனைப்பார்க்கிலும். நீதிபருடு - நீதியுள்ளவன், பலவந்துண்டு-பலமுள்ளவன். ஔனு-ஆவான். எ-று.

(பொ-ரை) நல்லவிவேகமுடையவனே! பூமியில் மலையையொத்த பருமனான யானையை பலவீனமுள்ள யானைப்பாகனானவனேறி யதை யடக்கி நடத்தும் விதமாய் விசாரிக்குங்கால், தேகபலத்தை யடைந்து புஷ்டியாயிருக்கின்றவனைப்பார்க்கிலும் புத்தியுடைய நீதியானே பலமுடையவனாவான் என்பதாம்.

(கு-ரை) யானை பலையந்தனைபெரிதானாலும் அதன்மேலேறும் யானைப்பாகனே பலவந்தனானதுபோல எவ்வளவு தேகபலமுடையவனாயிருந்தபோதிலும் அவனைப் பார்க்கிலும் புத்தியானே பலமுடையவனாவான். (93)

(க-ம்) வரதைன சேனு துன்னகு
கரவைன பந்துஜனுலகடகேககுமீ
பருலகு மர்மமு செப்பகு
பிரிகிகி தளவாயிதனமு பெட்டகு ஸுமதீ.

(ப-ரை) ஸுமதீ - நற்குணமுள்ளவனே! வரத-வெள்ளம், ஐனன்-உண்டாயிருந்தால், சேனு-புன்செய்நிலத்தை, துன்னகுமு-உழவேண்டாம், கரவைன-பஞ்சம்வர்த்தகாலத்தில், பந்துஜனுலகடகுன்-பந்துக்களிடத்திற்கு, எகுமீ-போகாதே, பருலகுன்-பிறருக்கும், மர்மமு-இரகசியத்தை, செப்பகுமு-தெரிவிக்காதே, பிரிகிகின்-பயப்படுங்குணமுள்ளவனுக்கு, தளவாயிதனமு-சேனாதிபதி வேலையை, பெட்டகுமு-கொடாதே. எ-று.

(பொ-ரை) நற்குணமுள்ளவனே! பிரவாகமுடைத்தாயிருக்கும் போது புன்செய்நிலத்தை நீயுழவேண்டாம், தேசத்தைப்பசியால்வாட்டும் பஞ்சகாலத்திலும் பந்துக்களிடம் போகாதே, பிறருக்குன்னுடைய ரகசியத்தைச்சொல்லாதே, வெலலயாட்டாது சேனைகளுக்குப் பயப்படுங்குணமுள்ளவனுக்குத்தளவாய் சேவகங்கொடாதே.

...னத்தை, திரிகட்டி சந்தமு - அறைத்ததுபோலா
மும்.எ-று.

(பொ-ரை) நல்லபுத்திமானே! மனைவிக்கு காம விகாரமுண்டாவத
ற்கு முன்னமேதாரிதப்பட்டுபலாத்காரமா யவளையொரு விட புருஷன்
வலிய வினைதலான தெப்படியிருக்கின்றதென்றால் சந்தனக் கல்லின்
மேல் தண்ணீர் கொட்டாமலே சந்தனத்தையறைத் தெடுத்தவண்ண
மாய் பிரயோஜன மில்லாமற்போகும் என்பதாம்.

(கரை) சேர்ந்தப்பெண்டீரேனிறும் அவள் மனமோப்பாமல்
பலவந்தந்து டனவளையணைதல் தண்ணீரில்லாமல் சந்தனக்கல்
லின்மிசை சந்தனம் வழித்தெடுத்தலுக்குச் சரியாய்முடியும். (96)

(கம்) வினதகு நெவ்வரு செப்பின
வினிநந்தனெவேகபடகவிவரிம்பதகுன்
கனிகல்ல நிஜமு தெலியனி [சுமதீ
மனுஜாதிபு டதடெகொல்ல மஹிலோ

(ப-ரை) சுமதீ-சுபுத்தியுடையவனே! எவ்வருசெப்பினன்-
யாவர்சொன்னபோதிலும், வினதகுன-கேட்கத்தகும், வினி
நந்தனே-கேட்டமாத்திரத்தில். வேகபடக -துரிதப்படாமல்,
விவரிம்பதகுன்- விசாரிக்கப்படும், கல்ல-இதுபொய், நிஜமு-
இதுவுண்மை, கநி-கண்டு பிடித்து, தெலியனி-தெரிந்துகொ
ள்ளாத,மனுஜாதிபுடதடெ-அந்தமனிதனே,மஹிலோன்-பூமி
யில், கொல்ல-இடையனுக்குச்சமானமானவன். எ-று.

(பொ-ரை) சுபுத்தியுடையவனே! நம்பத்தகுமானயாவர்யாது
சொன்னபோதிலும் அதைக்கேட்கவேண்டும், கேட்டமாத்திரத்தில்
வெய்பித்தரிதப்படாமல் முற்றும்நன்றாய் விசாரிக்கவேண்டும்,அப்படி
விசாரித்து இதுபொய் இது மெய்என்று தெரிந்துக்கொள்ளாத மனி
தனே பூமியிலெவருமிகழும்படியானமடையன் இடையன் என்பதற்
கொப்பாவன்.

(க-ரை)யாரோன்னசோன்னபோதிலுங்கேட் டவசரமில்லாம ல
துமெய்பொய்யென்று கண்டுபிடித்துத்தேர்ந்துக்கொள்ளாதவேந்
தமனிதனுயினும் அவனை இடையனைப்போலமடையனெனமதி. 97

(க-ம்) வீஸரபு ஜாதி கானி
வீசமுதாஜேயநட்டி வ்யர்த்துகொனி
தாசிகொடுகைனகானி
காசுலுகலவாடெ ராஜுடகதரா சுமதீ

(ப-ரை) சுமதீ - நற்புத்தியுள்ளவனே! வீசரபுஜாதி - நீசப்புலைச் சாதியானும் கானீ - இருந்தாலும், தான - தான், வீசமு - வீசம்பங்குக்கும், சேயு நட்டி - உதவாத, வ்யர்த்துடு - வீணனும் கானீ - இருந்தாலும், தாசி - தாசிக்கு, கொடுகுலுனன் - புத்திரனும், கானீ - இருந்தபோதிலும், காசுலுகலவாடெ - பொருளுள்ளவனே, ராஜுடகதரீ - ராஜனல்லவா - எ-று.

(பொ-ரை) நற்புத்தியுள்ளவனே! சாதியில் நீசப்புலையனுனாலும் ஒன்றில் பதினாறும் பாகமாகிய வீசத்திற்கு முதவாத வீணனானாலும், தாசிப் புத்திரனானாலும் காசுள்ளவனே ராஜனினுங் கனவானெனமதிக்கப்படுவான்.

(க-ரை) குலவீனனாயினும் நிஷ்பிரயோஜனனாயினும், தாசிபுத்திரனாகிலும் தனமுள்ளவனே கன்வானவன். (98)

(க-ம்) வீடெமு வேயனி நோருனு [ன்
ஜேடெல யதராம்ருதம்பு ஜெந்தனிநோரு
பாடங்க ரானி நோருனு
பூடிதகிரவைனயட்டி பொந்தர சுமதீ.

(ப-ரை) சுமதீ - நல்லவிவேகமுடையவனே! வீடெமு வேயனி நோருன் - தாம்பூலம் போட்டுக்கொள்ளாவாயும், ஜேடெலயதராம்ருதம்புன் - ஸ்திரீகளின் அதரபானம், செந்தனி நோருன் - செய்யாதவாயும், பாடங்கனிநோருன் - சங்கீதம்பாடாதவாயும், பூடிதகுன் - சாம்பலுக்கு, இரவைன - இருப்பிடமான, பாடுபொந்தர - பாழ்ங்குழியாகும் - எ-று.

(பொ-ரை) நல்லவிவேகமுடையவனே - தாம்பூலம் போட்டுக் கொள்ளாதவாயும் ஸ்திரீகளின் அதரபானஞ்செய்யாதவாயும் சேட்டோ

மனமு ஈநும்படி சங்கீதம்பாடாதவாயும் சாம்பருக் கிருப்பிடமான பாழ்ங் குழியாகும்.

(க-ரை) தம்பலம் போடாமலும் ஸ்திரீகளின் அதரபானஞ்சேய்யாமலும் சங்கீதம் பாடாமலு மிருக்கிறவாய் சாம்பர்கோட்டும் பாழ்ங் குழியாகும். (99)

(க·ம்) வெலயாலி வலஸ கூரிமி
கலுகது மரிகலிகெநேனி கடதேறதுகா.
பலுவுரு நடிசெடி தெருவுன [சுமதீ.
புலுமொலுவது மொலிசெநேனி பொதலது

(ப-ரை) சுமதீ - நற்புத்தியுடையவனே ! வெலயாலிவலன் -வேசிக்கு, கூரிமி-விஸ்வாசம், கலுகது - உண்டாகாது, மரி-ஒருவேளை, கலிகெனேனி - உண்டானாலும். கடதேறது கா- கடைசிவரைக்குமிருக்காதல்லவா, பலுவுரு-அநேகர், நடிசெடி, நடக்கும், தெருவுனன்-வழியில், புலு - புல், மொலுவது-முளைக்காது, மொலிசெநேனி-முளைத்தாலும், பொதலது-விருத்தியாகாது, எ-று.

(பொ-ரை) நற்புத்தியுடையவனே ! அநேகர் நடக்கும் மார்க்கத்தில் பச்சைப் புல்முளையாது அநவா புல் முளைத்தாலு மது விருத்தியாகாததுபோல் வேசிக்கு விஸ்வாசமுண்டாகவே உண்டாகாது ஒருவேளையவளுக்கு விஸ்வாசமுண்டானாலும் நீடித்துநிலைநிற்காது.

(க-ரை) பலர்போம்பாதையிற் புல்முளையாது, முளைத்தாலும் விருத்தியாகாதது போல வேசிக்கு அன்புண்டாகாது,உண்டானாலும் முடிவுவரைக்கு மிராது. (100)

(க·ம்) வெலயாலு வேயுபாவலு [புன்
வெலயக நகசாலபொந்து வெலமெசலிமி
கலலோன கன்னகலிமியு
வெலவெலடிநனிநம்மராது விநுராசுமதீ.

(ப-ரை) சுமதீ - நற்குணமுடையவனே ! வேலயங்கதாசியானவள், சேயுபாஸலு-செய்யும், பிரமாணவார்த்தைகளும், வெலயங்கன்-பிரசித்தமாயிருக்கும், அகசாலபொந்துதட்டானுடைய சிநேகமும், வெலமசெலிமியும்-வேளாளனுடைய சிநேகமும், கலலோனன்- கனவில், கன்னகலிமியுனு-கண்டசம்பத்தும்,வெலசெடின்-பிரகாசிக்கும்,அனிநம்மராது-என்று நம்பக்கூடாது, விநரா-கேள்-று.

(பொ-ரை) நற்குணமுடையவனே! விலைமாதுகையர்செய்யும் பிரமாணவார்த்தைகளும் பிரசித்தமாயிருக்கும் தட்டானுடையசிநேகமும் வெள்ளாழனுடைய சிநேகமும்கனவிற் கண்டசம்பத்தும் உண்மையென்று ஒருக்காலும் நம்பவொண்ணாது நீகேட்கக் கடவாய்.

(க-ரை) வேசியின் பிரமாணமும், தட்டான்உண்மையும்,வெள்ளாழன்சிநேகமும், கனவிற்கண்ட சம்பத்தும் நம்பக்கூடாது(101)

(கம்) சுபமுல நொந்தனி சதுவுனு
நபிநயமுக ராகரசமு நந்தனிபாடல்
குபகுபனு லேனி கூட்டமி
சபமெச்சனிமாட்டலெல்ல ஜப்பன சுமதீ.

(ப-ரை) சுமதீ-நல்லவிவேகமுடையானே ! சுபமுலன்-மேலான சுபங்களை, மொந்தனி-அடையாத, சதுவுனு-வித்தையும், அபிநயமுகன் - அபிநயத்தோடும் பொருந்திய, ராகரசமுன்-ராகம்முதலியசிங்கார ரசத்தை,அந்தனி-அடையாத,பாடலு, பாட்டுகளும், குபகுபனு, குபகுபஎனும் தொனி, லேனி கூட்டமி-இல்லாதசபையும், சப-சபையார், மெச்சனிமாட்ட-அங்கீகரிக்கமாட்டாதவார்த்தையும்,எல்லன்-இவைகளெல்லாம், சப்பன உருசியில்லாதன.எ.று.

(பொ-ரை) நல்லவிவேகமுடையானே! மேன்மையான சுபங்களை யிசத்திலும் பரத்திலுங்கொடாதவித்தையும்,அபிப்பிராயங்களை,

அஜரிவிக்கும் அபிநயத்தோடில் கூடிய ராகமுதலிய சிங்காரரசத்தை ப்ரகாசித்திராத பாட்டும், உச்சாகத்தையுண்டாக்கும் குபுகுபு என்னும் தொனியில்லாத சபையும், சபையிலங்கீகரித்துப்புகழாத வார்த்தைகளும் பிரயோஜனமில்லை யென்பதாம்.

(கரை) இம்மைமறுமைப்பயனைத்தாராதவித்தையும், அபிநய ங்காட்டிப்பாடாத சங்கீதங்களும், உச்சாகமுண்டாக்குந் தொனி யில்லாத சபையும், சபையார் மெச்சாதவார்த்தையும் வீண் காண். (102)

(க-ம்) சரசமு விரசமு கொறகே
பரிபூர்ணசுகம்பு லதிக பாதல கொறகே
பெருகுட விருகுட கொறகே
தரதக்குடஹெச்சுகொறகெ தத்யமுசுமதீ.

(ப-ரை) சுமதீ - நல்லமதியுடையவனே! சரசமு-பரியாசம், விரசமுகொறகே-விரோதத்திற்கே, பரிபூர்ண-குறைவில்லாத, சுகம்புலு-சௌக்கியங்கள், அதிக-மிக்க- பாதலகொறகே-துன்பத்திற்கே, பெருகுட-விருத்தியடைகிறது, விருகுட கொறகே-நசித்துப்போகிறதற்கே, தர-விலை, தருகுட-குறைதல், ஹெச்சுகொறகே, உயருகிறதற்கே, தத்யமு - இதுநிச்சயம். எ.று.

(பொ-ரை) நல்லமதியுடையவனே ! ஒருவரைபரியாசஞ்செய்தல் விரோதமுண்டாவதற்கேது வாகும், தான்மிதமின்றி சுகத்தையநுபவித்தவினை லதிகசஷ்டத்திற்கு முகாந்திரமாகும், அளவுக்கு மிஞ்சி யுயரமாகவளருகிறதினை லதற்குக் கெடுதியுண்டாகுவதற்கு காரணமாகும், விலை மிகவும் குறைதலானது உயருகிறதற்கு முன்குறிப்பாகும்; இஃதுண்மை.

(க-ரை) பரியாசம் விரோதத்தையும், சுகந்துன்பத்தையும், விருத்தியடைதல் நசித்தலையும், விலை குறைதல் உயருதலையும் உண்டாக்குமென்பது நிச்சயம் (103)

(க-ம்) மேலெஞ்சனி மலிநாத்முனி
மாலனுநகசாலவானிமங்கலஷிதுகா
னேலின நரபதிராஜ்யமு
நேலகலசிபோவுகானிநெகடது சுமதீ.

(ப-ரை) சுமதீ-நிம்மதியானமனதுடையவனே! மேலு-தனக்கு செய்த உபகாரத்தை, என்சனிமலிநாத்முனின்-நினையாத பாவியையும், மாலனு-பறையனையும், நகசாலவானின்-தட்டானையும், மங்கலின்-நாவிதனையும், ஹிதுகான் தனக்கு துணையாகக்கொண்டு,ஏலின-ஆளுகைசெய்த,நரபதிராஜ்யமு-அரசனுடைய அரசாக்ஷியும், நேலகலசிபோவுகானி - கெட்டு பாழாய் போகுமேயல்லாமல், நெகடது,விருத்தியடையாது. எ. று.

(பொ-ரை) நிம்மதியானமனதுடையவனே! தனக்குச்செய்தவுபகாரத்தை நினையாதமாபாவியையும்,கடினசித்தமுடைய பறையனையும், எக்காலத்திலும்வஞ்சனையேகுடிகொண்டமனதுடையதட்டானையும், விஸ்வாசமில்லாதநாவிதனையும் ஆகிய இவர்களையரசனொருவன் ஆப்தர்களாகக் கொண்டு செய்யும் அரசாக்ஷியானதழிந்து பாழாகுமேயல்லாமல் விருத்தியடையா தென்பதாம்.

(க-ரை) செய்ந்நன்றிமறந்தபஞ்சமாபாதகனையும், பறையனையும், தட்டானையும் நாவிதனையும்,துணையாகக்கொண்டராஜ்ஜிய ராஜரீகம் விருத்தியடையாது நசிக்கும். (104)

(க-ம்) ஸ்திரீலயெட வாதுலாடகு
பாலுரதோ ஜெலிமிசேசி பாழிம்பகுமீ
மேலைனகுணமு விடுவகு
மேலினபதிநிந்தசேயகென்னடு சுமதீ.

(க-ரை) பசித்துங்காலகப்பட்ட கூழேதேவாமிர்தம், பிக ...றிப்போரானது படையாப்பிரபுவேதாதா, கஷ்டகாலத்தில் விக னத்தாழாதவனே மானிடன், நிசைமெச்சிடும் பொறையுடையவ னே குலசிரேஷ்டன். (107)

(கம்) முதிதயொகனி வலசியுண்டக ...ன்
மதிசெடியொக க்ரூரவிடுமானகதிருகு
அதிசிலுக பில்லிபட்டின (சுமதீ.
ஜதுவுனெ பஞ்சரமுன வலெஜகதினி

(ப-ரை) சுமதீ-நற்புத்தியானே! ஜகதின் பூமியில், முதித-ஒரு பெண்ணானவள், ஒகனின்-யாதாமொரு நாயகனை, வலசி யுண்டக-இச்சித்திருக்குங்கால், மதிசெடி-புத்திகெட்டு-ஒக க்ரூ ரவிடு-துஷ்டனான வேறொரு புருஷன், மானக(அந்தப்பெ ண்ணை) விடாமல், திருகுன் - திரிவான், அதி-அந்தப்பெண், சிலுக - கிளியைப்போன்றவள், பில்லிபட்டின்-அதைபூனை பிடித்தால், பஞ்சரமுனவலே - கூண்டிலிருந்ததைப் போலே ஜதுவுனெ-பேசமா. எ-று.

(பொ-ரை) நற்புத்திமானே! ஒருபெண்ணானவள் யாதா மொருபுருஷன்பேரில் மோகித்திருக்குங்கால் மூடனானவொருவிட புருஷன் அப்பெண்ணை விடாமற்பின்றொடர்ந்து திரிவான். அப்பெ ண் கிளிபோன்றவள் கிளியைப் பூனைபிடித்துக்கொண்டால் கூண்டி லிருந்ததுபோல் பேசாதென்று பாவனை.

(க-ரை) ஒரு பெண்ணொரு ...
...

ஶ்ரீ

# மூலமும் - உரையும்.

புத்ருனிகனுகொனிபொகடக
புத்ரோத்ஸாஹம்புநாடுபொந்துர சுமதீ.

(ப-ரை) சுமதீ-சற்குணனே! புத்ர-புத்திரன் விஷயமாய் உத்ஸாஹமு-சந்தோஷம்-தண்ட்ரிகின்- தகப்பனுக்கு, புத்ருடு-புத்திரன், ஜன்மின்சினபுடே-பிறந்தபொழுதே, புட்டது-உண்டாகாது, ஜனுலு-மனிதர்கள், ஆபுத்ருனின் - அக்குமாரனை கனுகொனி-பார்த்து, பொகடகன் - புகழும்போது, நாடு-அக்காலத்தில், புத்ரோத்ஸாஹம்பு - புத்திரன்பிறந்தானெனசந்தோஷம், பொந்துர-அடைவான். எ-று.

(பொ-ரை) சற்குணனே ! யாதொருதந்தைக்கு புத்திரன் பிறந்தானே எனும் சந்தோஷம் புத்திரன் பிறந்தவன்றே வுண்டாகாது பூமியிலுள்ள ஜனங்கள் தன்பிள்ளையைப் பார்த்து சான்றோனெனப் புகழும்போ தனைக்கேட்டுபுத்திரன் பிறந்த சந்தோஷத்தை யன்று அடைவன்.

(க-ரை) தந்தைக்கு புத்திரன்மீது சந்தோஷம் பிள்ளைப்பிறந்தஞான்றே உண்டாகாது, புத்திரனைஜனங்கள் பார்த்துப்புகழுங்கால் அப்புத்திரன்மேல் சந்தோஷம் தந்தைக்குண்டாகும். (109)

(கம்) தனகலிமியிந்த்ரபோகமு
தனலேமியுசர்வலோகதாரித்ரம்பௌ
தனசாவுஜலப்ரளயமு
வலசினயதியெரம்பதந்பமு சுமதீ.

முழுகிவிட்டதாகுந், தனவலசினயதிமெய - தான் இச்சித்தவ
ளே, ரம்ப-இதப்வரம்பையாவள், தத்பமு-இதுநிச்சயம்-எ-று.

(பொ-ரை) நன்மதியே! தனக்குண்டானசம்பத்தே தேவேந்திரனுக்குண்டான போகத்தையுண்டாக்குமென்றும், தன்னுடைக் வறுமையே சர்வலோகத்தாருக்குமுள்ள தரித்திரமென்றும், தன்னுடைய சாவானது உலகமெல்லாம் ஜலப்பிரளயத்தினால் முழுகினதென்றும், எப்பேர்ப்பட்ட குரூபியானாலும் தான்மோகித்தவளே தெய்வரம்பையென்றும் மூடன்நினைப்பானென்பதாம்.

(க-ரை) தன்சம்பத்தே இந்திரபோகம், தன்வறுமையே உலகத்திற்கெல்லாம் வறுமை, தனது இறப்பு ஜலப்பிரளயம், தான் மோகித்தவளே அரம்பை எனமூடன் மதிப்பான். (110)

சுமதிசதகம் பதவுரை முதலியன

முற்றிற்று.





